## தர்ம சக்கரம்: 28வது பைண்டு வால்யூம்

தர்ம சக்கரம் ஆண்டுதோறும் தை மாதம் முதல் வெளிவருகிறது. தர்ம சக்கரம் 28வது பைண்டு வால்யூம் பெற விரும்புகிறவர்கள் முன்பண மாக 15-12-78ஆம் தேதிக்குள் தர்ம சக்கரம், திருப்பராய்த்துறை-639 115 என்ற விலாசத்திற்கு ரூ. 13-00 கிடைக்கும்படி அனுப்பிவைக்கவேண்டும். அவ்வாறு அனுப்புகிறவர்களுக்கு வரும் தை மாதம் முதல் அச்சாகும் இதழ் களினின்று எடுத்துவைத்து ஸித்தார்த்தி மார்கழி இதழ் அச்சாகி முடிந் ததும் 12 இதழ்களையும் ஆண்டு அட்டவணையை முகப்பில் வைத்துப் பிளாஸ் டிக் கோட்டெட் காலிகோவைக் கொண்டு ஒரு நல்ல புத்தகமாகப் பைண்டு செய்து தரப்படும். தபால் செலவு அதிகம் ஆகும் ஆதலால் தபோவனத் திற்கு வரும்பொழுதோ அல்லது வந்து திரும்புகிறவர்கள் மூலமோ இதைப் பெற்றுக்கொள்ளலாம். பொருள்வசதி உடையோர் இந்தப் பைண்டு வால்யூம் ஒன்றிற்குப் பணம் அனுப்பிவைத்துவிட்டுத் தாம் சந்தா செலுத்தி யதின் மூலம் மாதம் தோறும் வரும் இதழைப் பலருக்குப் படிப்பதற்குக் கொடுத்து வாங்கி அவர்கள் நன்கு பயனடையச் செய்யலாம். இது ஒரு நல்ல கைங்கரியம் ஆகிறது.

### VIVEKANANDA KENDRA, KANYAKUMARI

ANNOUNCES

**3-WEEK YOGA SHIKSHA SHIBIR, (Residential Winter Camp)**

is to be held at Kanyakumari from 25th December '78 to 14th January '79, to impart training in Yoga and to make the participants conversant with our cultural heritage. Medium of instruction is English. The camp is open to men only. Camp fees including boarding and lodging charges is Rs. 150/- plus a Registration fee of Rs. 25/- (Total Rs. 175/-) Those above the age of 18, possessing knowledge of English and sound health are eligible to participate. Application for Prospectus should reach Vivekananda Kendra, Yoga Shibir, Vivekanandapuram, Kanyakumari-629 702 (Phone No. 32 & 50) before November 10, 1978.

# தர்ம சக்கரம்

மாத சஞ்சிகை

ACC. NO. 38674.

| சக்கரம் 27 | காளயுக்தி ஹு ஐப்பசி மீ | ஆரம் 10 |
|---|---|---|


## பொருளடக்கம்




## சந்தா விவரம்

டிபாஸிட் சந்தா: ரூ. 100 அனுப்பி இங்கு டிபாஸிட் செய்துவிட்டால் டிபாஸிட் இங்கு இருக்கும்வரையில் மாதந்தோறும் தர்மசக்கரப் பத்திரிகை தங்களுக்கு வந்து கொண்டிருக்கும். ஆண்டுதோறும் சந்தாச் செலுத்திப் புதுப்பிக்க வேண்டியதில்லை. பத்திரிகை வேண்டாம் என்று கருதும்பொழுது டிபாஸிட் செய்த ரூபாய் நூறையும் திரும்பப் பெற்றுக்கொள்ளலாம். இந்தத் திட்டம் உள்நாட்டுக்கு மட்டும் உரியது.

ஆண்டு சந்தா: ரூ. 10 செலுத்தியது முதல் அல்லது அடுத்த மாதம் முதல் பன்னிரண்டு மாதங்களுக்கு ஒவ்வொரு தமிழ் மாதமும் முதல் தேதியில் கிடைக்கும்படி பத்திரிகை அனுப்பப்படுகிறது.

சகாய சந்தா: தர்ம சக்கரம் அடக்க விலைக்கு வெளியிடப்படுகிறது. ஆண்டு சந்தா ரூபாய் பத்து செலுத்த இயலாதவர்கள் ரூபாய் ஐந்து மட்டும் அனுப்பலாம். பாக்கி ரூபாய் ஐந்தைப் பாண்டிச்சேரி S. விஸ்வநாதன் 'தர்ம சக்கர உதவி நிதி' யினின்று ஈடுசெய்து கொள்கிறோம். தெய்வீக விஷயமாதலால் ரூபாய் பத்துச் செலுத்த இயலுகிறவர்கள் இந்தச் சலுகையைப் பயன்படுத்த வேண்டாம்.

இலவச சந்தா: தமிழக அரசாங்கத்தால் தமிழ்நாட்டில் 1445 பொது நூலகங் கள் அமைக்கப்பெற்றுள்ளன. அவை அனைத்திற்கும் தர்ம சக்கரம் இவ்வாண்டு ஆவணிமாதம் முதல் தொடர்ந்து அன்பர்களின் உதவியால் இனமாக அனுப்பப்பெறு கிறது. நூலக நிர்வாகியிடம் கேட்டுப் பெற்றுப் படித்துப் பயனடையக் கோருகிறோம். இந்த ஞானயக்ஞத்துக்குப் பொருளுதவி செய்ய விரும்புவோர் தர்ம சக்கரம், திருப்பராய்த்துறை–639 115, திருச்சி மாவட்டம் என்ற விலாசத்துக்கு எழுதித் தெரிந்து கொள்ளலாம்.

**உள்நாடு தனி இதழ் ரூ. 1-00. வெளிநாடு வருட சந்தா ரூ. 20-00**

# அந்தர்யோக விவரங்கள்

**சேலத்தில் 22—10—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: ஸ்ரீ சாரதா கல்லூரியின் பிரார்த்தனை கொட்டகை*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்*
*உணவு வசதி: நேரில் ரூ. 1-00 செலுத்தி சீட்டுப் பெற்றுக்கொள்ளலாம்.*

**சென்னையில் 22—10—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: புரசவாக்கம் ஸர் M.C.T. முத்தையாசெட்டியார் பெண்கள் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**கோவை ஜில்லா—வையம்பாளையத்தில் 22—10—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சுதந்திரம் உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஆத்மானந்தர்*

**திருநெல்வேலி ஜில்லா—அம்பாசமுத்திரத்தில் 22—10—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: அகஸ்தியர் கோவில்*
*நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்*

**இராமநாதபுரம் ஜில்லா—பரமக்குடியில் 22—10—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: சௌராஷ்டிர உயர்நிலைப்பள்ளி*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி ஸதானந்தர்.*
*குறிப்பு: பகல் உணவிற்கு அவரவர்களே ஏற்பாடு செய்துகொள்ளவும்.*

**மதுரை ஜில்லா—காமயகவுண்டன்பட்டியில் 27—10—78 வெள்ளிக்கிழமை**

*இடம்: ஸ்ரீ பாட்டையா கோவில் காமதேனு மண்டபம்*
*நேரம்: காலை 9-30 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**பல்லடம் தாலுகா—கேத்தனூரில் 11—11—78 சனிக்கிழமை**

*இடம்: பெருமாள்கோவில்*
*நேரம்: இரவு 7-00 மணிமுதல் 9-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**பொள்ளாச்சி தாலுகா—உடுமலைப்பேட்டையில் 12—11—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: முத்தமிழ்ச்சங்கக் கட்டடத்தில்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

**திருநெல்வேலி ஜில்லா—மூலக்கரைப்பட்டியில் 12—11—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: பஞ்சாயத்து யூனியன் ஆரம்பப் பாடசாலை*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி பரானந்தர்*

**கோவை ஜில்லா—ஈரோட்டில் 19—11—78 ஞாயிற்றுக்கிழமை**

*இடம்: பெரியார் மன்றம்*
*நேரம்: காலை 10-00 மணிமுதல் மாலை 4-30 மணிவரை*
*நடத்துபவர்: ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர்*

# ஸ்ரீ தாயுமான சுவாமிகள்

## கோயில் திருப்பணி



இராமநாதபுரம் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் சன்மார்க்க சங்கம் என்பது—1951-ஆம் ஆண்டு 3-வது நம்பராக Societies Registration Act XXI of 1860 பிரகாரம் அரசாங்கத்தில் பதிவு செய்துள்ள சங்கமாகும். இந்தச் சங்கத்தின் மகாசபை 1978 ஜுலை மாதம் 30ஆம் தேதி தாயுமான சுவாமிகள் சமாதிக்கோயில் சம்பந்த மாக ஸ்தாவர ஜங்கம சொத்துக்கள் யாவற்றையும் திருச்சி ஜில்லா திருப்பராய்த்துரையிலிருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத்திடம் ஒப்படைத்துவிடுவதாகத் தீர்மானித்தது. அந்தத் தீர்மானத்தை 1978-ம் ஆண்டு செப்டம்பர் மாதம் 10ஆம் தேதியன்று இரண்டாவது முறை கூட்டம் கூடி ஊர்ஜிதப்படுத்தியது. அன்று முதல் சட்டபூர்வமாக ஸ்ரீ தாயுமானவர் சமாதிக் கோயில் சம்பந்தமான யாவும் திருப்பராய்த் துறையிலிருக்கும் ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனத் துக்குச் சொந்தமாகிறது. செப்டம்பர் மாதம் 13ஆம் தேதி இராமநாதபுரம் சப்–ரிஜிஸ்டர் ஆபீஸில் இத்தீர்மானம் பதிவு செய்யப்பட்டது.

தாயுமானவர் சமாதிக் கோயிலையொட்டி அருகில் சாலை ஒன்று அமைந்துள்ளது. கோயில் மண்டபம் கட்டுவதற்கு அது இடைஞ்சலாக இருக்கிறது. அந்தச் சாலையை 20 அடி தெற்கே தள்ளி அமைப்பதற்கான ஏற்பாடுகள் நடைபெற்று வருகின்றன.

ஐப்பசி மாதத்தில் ஆங்கு அமைப்பதற்கு இருக்கின்ற ஆஸ்ரமத்திற்குத் தேவையாயுள்ள கட்டட வேலை துவக்கப்பெறும். தபோவனத்தைச் சேர்ந்த துறவியர் ஒருவர் இராமநாதபுரத்தில் சமாதிக் கோயிலுக்கருகில் தங்கியிருந்து கொண்டு அலுவல்களைக் கவனித்து வருவார்.

ஆஸ்ரம அமைப்பு, சமாதிக் கோயில், அதன் முன்மண்டபம் ஆகியவைகள் கட்டி முடிக்க சுமார் 3 லட்ச ரூபாய் செலவாகும். நித்திய வழிபாடு, நிர்வாகம் ஆகியவைகளுக்கு மூலதனமாக 1 லட்ச ரூபாய் ஒதுக்கிவைக்கவேண்டும். தாயுமானவருடைய பாடல் அடக்க விலைக்கு வழங்குதற்கும் ஆங்கிலம் முதலிய பிறமொழிகளில் மொழிபெயர்ப்பதற்கும் மூலதனம் 1 லட்சம் ரூபாய் தேவையாயிருக்கும். ஆக இப்பொழுது 5 லட்சம் ரூபாய் செலவில் இந்த ஸ்தாபனம் புதுப்பிக்கப்படுவதற்காகத் திட்டமிடப்பட்டிருக்கிறது.

தங்களுடைய பெயர்களை விளம்பரப் படுத்த விருப்பமில்லாத நன்கொடையாளர்கள் தங்களுடைய கருத்தைத் தெரிவித்தால் ஓர் அன்பர் என்று நன்கொடைப் பட்டியலில் சேர்த்து விடுவோம். அதற்காகவென்று ரூ. 99-95 அனுப்பவேண்டுமென்ற நிர்பந்தமில்லை. தங்களுக்கு விருப்பமான தொகையை உள்ளபடி அனுப்பி வைக்கலாம்.

## 1978 செப்டம்பர் மீ 30வ வரையில் நன்கொடைகள் வரவின் விபரம்

| நேதி | விலாசம் | | | ரூபாய் |
|---|---|---|---|---|
| | இராமநாதபுரம் ஸ்ரீ தாயுமான சுவாமிகள் சன்மார்க்க சங்கம் தபோவனத்திடம் ஒப்படைத்துள்ள தொகை | | | 3 792-28 |
| 17-8-78 | ஸ்ரீ M. ராமலிங்கம் | சிதம்பரம் | தென்ஆற்காடுமாவட்டம் | 250-00 |
| 25-8-78 | ஸ்ரீமதி K. காந்திமதியம்மாள் | ராயபுரம் | சென்னை | 200-00 |
| 19-9-78 | ஸ்ரீ M.A. ஆயிகவுண்டர் | காசிபாளையம் | கோவை ஜில்லா | 200-00 |
| | ஸ்ரீ P.R. அங்கமுத்து முதலியார் | சூளை | சென்னை | 150-00 |
| | டாக்டர் சே. கு. முத்தையா | நங்கவள்ளி | சேலம் | 101-00 |
| | ஸ்ரீ V.K. துரையன் | கோபாலபுரம் | கோவை | 101-00 |
| 20-9-78 | ஸ்ரீ C. சங்கரசுப்பைய முதலியார் | அம்பாசமுத்திரம் | திருநெல்வேலி | 150-00 |
| 21-9-78 | ஓர் அன்பர் குடும்பம் | கரூர் | 105+301+301+301 | 1 008-00 |
| 23-9-78 | ஸ்ரீ R.K. காமயசாமி | காமயகவுண்டன்பட்டி | மதுரை | 1 000-00 |
| | ஸ்ரீ S. கிருஷ்ணன் | ராசிபுரம் | சேலம் மாவட்டம் | 101-00 |
| | ஸ்ரீமதி P. மங்கையர்க்கரசி | செஞ்சி | தென்ஆற்காடு மாவட்டம் | 101-00 |
| | ஜனாப் OM.J. சேக்அப்துல்காதர் | அழகன்குளம் | ராமநாதபுரம் ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ A.V. தனுஷ்கோடி | விருதுநகர் ,, | ,, | 101-00 |
| 25-9-78 | ஸ்ரீ P. கனகசபாபதி & பிரதர் | காமயகவுண்டன்பட்டி | மதுரை | 150-00 |
| | ஓர் அன்பர் | சேரன்மகாதேவி | திருநெல்வேலி | 101-00 |
| | ஓர் அன்பர் | கம்பாலபட்டி | கோவை ஜில்லா | 100-00 |
| 26-9-78 | ஸ்ரீ V. கோபாலகிருஷ்ணபிள்ளை | திருவனந்தபுரம் | கேரளா | 101-00 |
| | ஸ்ரீ S T. சம்பந்தம் | மாம்பலம் கிழக்கு | சென்னை | 101-00 |
| | ஸ்ரீ A. கிருஷ்ணமராஜு | பெண்ணாடம் | தென்ஆற்காடு ஜில்லா | 100-00 |
| 27-9-78 | ஸ்ரீ T. அருணாசலம் | ஆனைமலை | கோவை ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ P.K. தியாகராஜன் | பெருவளநல்லூர் | திருச்சி ஜில்லா | 100-00 |
| | ஸ்ரீ P.M. கோபாலசாமிரெட்டியார் | ,, | ,, | 100-00 |
| 28-9-78 | ஸ்ரீ M. ஆறுமுகம் கவுடு | கரூர் | திருச்சி ஜில்லா | 501-00 |
| | ஸ்ரீமதி A.V.P. லக்ஷ்மி அம்மாள் | அவிநாசிகவுண்டன்பாளையம் | கோவை | 470-00 |
| | ஸ்ரீ O.M.S.S. செண்பகவல்லி | விருதுநகர் | இராமநாதபுரம் ஜில்லா | 252-00 |
| | ஸ்ரீ S. சுப்பிரமணியம் | கல்லிடைக்குறிச்சி | திருநெல்வேலி | 101-00 |
| | சிப்பந்திகள் பாங்க்ஆப் பரோடா | காமயகவுண்டன்பட்டி | மதுரைஜில்லா | 100-00 |
| 29-9-78 | ஸ்ரீ N.K. பாண்டியராஜ் | காமயகவுண்டன்பட்டி | மதுரை ஜில்லா | 1 025-00 |
| | ஸ்ரீ N.K. ராமராஜ் | ,, | ,, | 1 000-00 |
| | ஸ்ரீ N K.S. முருகேஷ்பாபு | ,, | ,, | 1 000-00 |
| | ஓர் அன்பர் | ஆழ்வார்குறிச்சி | திருநெல்வேலி ஜில்லா | 101-00 |
| | ஸ்ரீ M. பெருமாள்செட்டி | திருச்செங்கோடு | சேலம் ஜில்லா | 100-00 |
| 30-9-78 | ஸ்ரீ T.C. ஜகந்நாத ரெட்டியார் | ஆலத்துடையான்பட்டி | திருச்சி | 100-00 |
| | ரூ. 100க்குக் கீழ் நன்கொடை வந்த மொத்தத் தொகை | | ரூ. | 334-95 |
| | | | ஆக கூடுதல் ரூ. | 13 395-23 |




# தர்ம சக்கரம்

அறவாழி அந்தணன் தாள்சேர்ந்தார்க்(கு) அல்லால்
பிறவாழி நீந்தல் அரிது.


சக்கரம் 27 | காளயுக்தி ஞு ஐப்பசி மீ | ஆரம் 10


## பிரார்த்தனே

चिद्रूपेण परिव्याप्तं त्रैलोक्यं सचराचरम्
तत्पदं दर्शितं येन तस्मै श्रीगुरवे नमः

— गुरुस्तोत्रम्

சித்ரூபேண பரிவ்யாப்தம் த்ரைலோக்யம் ஸசராசரம்
தத்பதம் தர்சிதம் யேன தஸ்மை ஸ்ரீ குரவே நம:

— குருஸ்தோத்ரம்

சரம் அசரத்தோடு கூடிய மூவுலகையும் வியாபித்திருக்கிற அறிவு சொரூபியாகிய அவரைத் தரிசிக்கும்படி செய்துவைத்த குருவுக்கு வணக்கம்.

ஏதுந் தெரியா எளியேனே வாவெனநின்
போதநிலே காட்டிற் பொருதோ பராபரமே.

— தாயுமானவர்

# அருள் விருந்து

மெய்ம்மையும், மெய்ப்பொருளும் ஒன்றே.

குழந்தையின் இயல்பை நிறைஞானி யெய்துகிறான்.

நல்வாழ்வு வாழ்பவனே பிறருக்கு நலனை வழங்க வல்லவனாகிறான்.

உன்னை நீ பண்படுத்துதற்கேற்ப உலகில் பண்பாட்டை நீ காண்பாய்.

ஒரு லக்ஷியத்துக்காக வாழ்பவனுக்குப் பேராற்றல் தானாக வடிவெடுக்கிறது.

சுயநலத்தை அகற்றியவன் உலகிலுள்ள தீமையையும் ரசிக்க வல்லவனாகிறான்.

திருவருள் யாண்டும் ஆதிக்கம் செலுத்துகிறது என்பதை அறிகிறவன் சினத்துக்கு ஆளாவதில்லை.

ஆத்ம பரிபாகம் ஏகாந்தத்தில் உருவெடுக்கிறது. நல்லொழுக்கம் சமுதாயத்தில் உருவெடுக்கிறது.

நிறைநிலையெட்டிய மலரைக் காண்பது போன்று மனதின் நிறைவு நிலையையும் காணச் சாதகன் கடமைப்பட்டிருக்கிறான்.

நலத்தில் நிலைத்திருப்பவனுடைய மேனி மெல்லியதாயிருக்கலாம். ஆயினும் அவனுடைய பிடிப்பு உறுதி வாய்ந்ததாயிருக்கும்.

நலன் ஒன்றைச் செய்யவல்லவன் அதைச் செய்யாது வெறுமனே இருந்து விடுவானாகில் அவன் நெறி பிறழ்ந்தவன் ஆகிறான்.

அஹிம்சையில் நிலைநிற்பவனுடைய முன்னிலையில் துஷ்ட ஜந்துக்கள் தங்களுடைய கொடூரத் தன்மையை மறந்து விடுகின்றன.

நலனை அறிகிறவன் நலனில் நிலை நிற்கிறான். நலனில் நிலை நிற்பவன் நிறை நிலை யெய்துகிறான். நிறை நிலையும் தெய்விகமும் ஒன்றே.

மன்னுயிர்களை முழுமனதோடு நேசிப்பவனிடத்து வெறுப்பு, சினம், பொறாமை முதலிய சிற்றியல்புகள் தலையெடுக்கமாட்டா.

உயர்வு ஒன்று வந்தால் அதைத் தொடர்ந்து அமைதியும் வருகிறது. இது இயற்கையின் அமைப்பாய் இருப்பது போன்று சமுதாயத்தின் அமைப்பாகவும் இருக்கிறது.

தன் தேவைக்கு அதிகமான பொருள் ஒருவனுக்கு வாய்க்குமிடத்து அதை அவன் தன்னுடையதாக வைத்துக் கொள்ளலாகாது. பொது நலனுக்குப் பயன்படுத்த வேண்டும்.

### பரமஹம்சர் புகட்டிய

# பெருநெறி விளக்கம்

1884ஆம் ஆண்டு அக்டோபர் மாதம் 26 ஆம் தேதி ஞாயிற்றுக்கிழமையன்று பிற்பகலில் பரமஹம்சதேவருடைய அறையில் பக்தர்கள் பலர் கூடியிருந்தனர். அவர்களுள் மனோ மோகன், மகிமசரண், மகேந்திரர் முதலிய வர்கள் குறிப்பிடத்தகுந்தவர்கள் ஆகிறார்கள். சிறிது நேரத்திற்குப் பிறகு ஈசானனும் ஹாஸ் ராவும் அங்கு வந்துசேர்ந்தனர். பிருந்தாவனத் துக்குச் சென்றிருந்த பலராம், ராக்கால் ஆகியவர்கள் இன்னும் திரும்பி வந்து சேர வில்லை. அந்த க்ஷேத்திரத்தின்கண்ணே பரம ஹம்சதேவரிடம் இடையிடையே வந்து கொண்டிருந்த இளைஞர்களில் சிலர் சிறிது காலத்திற்குப் பிறகு அவருடைய அத்யந்த சிஷ்யர்களாக மாறி அமைவாராயினர். பரம ஹம்ச தேவரோடு லாட்டு என்னும் இளைஞன் வசித்து வந்தான். பக்கத்தில் கிராமம் ஒன்றில் வசித்து வந்த யோகின் என்னும் இளைஞன் இடையிடையே பரமஹம்சதேவரைத் தரிசிக்க வந்து கொண்டிருந்தான்.

அன்னை பராசக்தியின் அருட் செல்வராகத் திகழ்ந்த பரமஹம்சதேவர் ஒரு குழந்தையின் பாங்கைப் படைத்திருந்தார். இனிமையும் அமைதியும் அவரிடம் மிளிர்வனவாயின. அவருடைய சந்நிதியில் குழுமியிருந்த பக்தர்களுடைய உள்ளத்தில் பரமானந்தம் பரவுவது ஆயிற்று. அதன் அறிகுறிகள் அன்னவர்களின் முகவிலாசங்களில் வெளியாய்க் கொண்டிருந் தன. அவர்கள் எல்லாரும் தரையின்மீது அமர்ந்திருந்தனர். அவர்கள் கண் பார்வை யாவும் பரமஹம்சதேவர்மீது நாட்டப்பெற்று இருந்தன. ஒரு பாலகன் போன்று அவர் ஏதோ ஆழ்ந்த கருத்தில் மூழ்கியிருந்தார்.

பரமஹம்சதேவர் (மனோமோகனைப் பார்த்து): "தென்படுகின்ற அனைத்திடத்தும் ராமனுடைய சாந்நித்தியத்தையே நான் காண் கிறேன். நீங்கள் எல்லாரும் இங்கே அமர்ந் திருக்கிறீர்கள். உங்கள் அனைவரையும் ராம சொருபமாகவே நான் பார்க்கிறேன்."

மனோமோகன்: "ஐயனே தாங்கள் பகர்வது முற்றிலும் மெய். ராமனே பிரபஞ்ச மெங்குமுள்ள அனைத்துமாகத் திகழ்ந்து கொண்டிருக்கின்றான். மற்றும் ஓர் உண்மையை நாம் ஞாபகத்தில் வைத்துக் கொள்வது உசிதம். தேவரீர் திருவாய் மலர்ந்தருளுகிற படி நாராயணனே நீர் ஆக வடிவெடுத்திருக் கிறான். ஆயினும் சில நீர்வகைகள் பருகுவதற் குப் பொருத்தமானவைகள் அல்ல. பானம் பண்ணுவதற்குரிய ஜலம் எது என்பதைப் பாகுபடுத்தவேண்டும். இன்னும் சில நீர்வகை கள் கை கால் கழுவுவதற்கு மட்டும் உதவுகின் றன. மற்றும் சில நீர்வகைகள் பாத்திரம் பாண்டங்களைத் துலக்குவதற்குப் பயன்படு கின்றன. தீண்டத் தகுதியற்ற நீர் வகைகளும் உண்டு."

பரமஹம்சதேவர்: "அது முற்றிலும் மெய். ஆயினும் கடவுள் ஒருவரே அனைத்துமாய் வடி வெடுத்திருக்கிறார் என்பதை நான் காண் கிறேன். ஜகத்தும் அதிலுள்ள உயிர் வகைகள் யாவுமாய் இலங்குபவர் பரம்பொருளே."

இப்பொழுது பரமஹம்சதேவர் தமது கட்டி லுக்கு அருகில் இருந்த சிறிய கட்டிலின்மீது அமர்ந்தார்.

பரமஹம்சதேவர் (மகிமசரணைப் பார்த்து): "நான் சத்தியத்தினின்று சிறிதேனும் பிறழா திருக்கிறேன் என்பது உண்மை. ஆனால் அவ் வுணர்விலேயே நான் ஊறிக்கிடப்பது அவசி யமா? உணவு உண்ணமாட்டேன் என்று ஒரு தடவை நான் சங்கல்பித்தால் பிறகு உணவை ஏற்பது ஒரு பொழுதும் சாத்தியப்படாது. பசித்திருந்தாலும் உணவை ஏற்க முடியாது. மற்றொரு விஷயம். மரச்சோலைகளுக்குள் மலம் ஜலம் கழிக்க நான் போகும்பொழுது இன்னார் தான் என்னுடைய கமண்டலத்தை எடுத்து வரவேண்டுமென்று ஒரு தடவை நான் இயம்பி னால் அம்மனிதன் மட்டுமே அதை எடுத்து வர வேண்டும். வேறு ஒரு மனிதன் அதைக் கொண்டுவந்தால் அதை அவன் திருப்பி எடுத் துச் சென்றாகவேண்டும். இத்தகைய இக்கட் டில் நான் இருப்பானேன்! இதினின்று விலகிக்

கொள்ளுதற்கு உபாயம் ஏதும் இல்லையா?

"மற்றும் ஒரு விஷயம். எப்பொருளையும் நான் என்னோடு எடுத்துச் செல்லுவது சாத்தியப் படுவதில்லை. அடுத்தவேளை அருந்துதற் கென்று எவ்வுணவும் என்னுடன் வரலாகாது. தாம்பூலம் கூட என்னைத் தொடர்ந்துவரு வதைச் சகிக்கமுடிவதில்லை. இப்படிப் பொருள் கள் என்னோடு வருவது பரிக்கிரஹத்திற்குச் சமானமாகிறது. அடுத்தவேளை பிரயோஜனத் திற்காகவென்று எடுத்து ஒதுக்கி வைப்பது பரிக்கிரஹம் எனப்படுவதாம். சிறிய மண்ணாங் கட்டி ஒன்றை எடுத்துச் செல்லுவதும் எனக் குச் சாத்தியப்படாது."

இப்பொழுது மானுடனொருவன் பரமஹம்ச தேவருடைய அறைக்குள்ளே நுழைந்தான். எதிரேயிருந்த யதுமல்லிக்கர் தோட்டத்தில் பரமஹம்சரைக் காண்பதற்காக ஹிருதயர் காத்துக்கொண்டிருக்கிறார் என்னும் செய் தியை அம்மனிதன் பரமஹம்சதேவரிடம் தெரி வித்தான்.

பக்தர்களிடம் பரமஹம்சதேவர் இயம்பியதா வது: "ஹிருதயனை நான் பார்த்தாகவேண் டும். தயவு செய்து நீங்கள் யாரும் இவ் வறையைவிட்டு வெளியே போகவேண்டாம்." காலில் பாதரட்சையை மாட்டிக்கொண்டு தக்ஷிணேசுவரப் பூங்காவின் கிழக்குப் பக்கத்தி லிருந்த வாயிலை நோக்கிப் பரமஹம்சதேவர் சென்றார். மகேந்திரர் மட்டும் அவரைப் பின் பற்றிச் சென்றார். பாதை முழுதிலும் செங்கல் தூள் பரவிக் கிடந்தது. கோயில் நிர்வாகி அப்பாதையில் நின்றுகொண்டிருந்தார். பரம ஹம்சதேவரைப் பார்த்ததும் அவர் வீழ்ந்து வணங்கினார். பாதையின் இடப்பக்கம் கோயி லுக்குள்ளே நுழைவதற்காக என்று அமைக் கப்பெற்ற வடபுறத்து வாயிலைத் தாண்டி அவர் சென்றார். இந்த வடபுறத்து வாயிலின் கண் காவலாளிகள் அமர்ந்திருந்தனர். அன்ன வர்கள் தாடி வைத்திருந்தனர். அதே இடப் பக்கத்தில் குதி என்று அழைக்கப்பெற்ற கட்டடம் ஒன்று இருந்தது. அக்கட்டடம் கோயி லின் உரிமையாளர்கள் வசிப்பதற்கு என்று இருந்தது. அதைத் தாண்டிய பிறகு பாதை யின் இருமருங்கிலும் பூப்பூக்கும் மரங்கள் வைக்கப்பெற்றிருந்தன. அவைகளுக்கப்பால் வலப்பக்கம் நீர்த்தொட்டி ஒன்று அமைக்கப் பெற்றிருந்தது. இவை யாவையும் கடந்து கோயில் பூங்காவுக்கு வெளியே பரமஹம்சர் போனார். யதுமல்லிக்கர் தோட்டத்தின் வாயிலண்டை ஹிருதயர் காத்துக்கொண்டிருந் ததைப் பரமஹம்சர் பார்த்தார்.

கைகூப்பி நின்று கொண்டிருந்த ஹிருதயர் பரமஹம்சரைப் பார்த்தவுடனே அவருடைய முன்னிலையில் வீழ்ந்து வணங்கினார். எழுந் திருக்கும்படி பரமஹம்சதேவர் இயம்பினார். எழுந்து நின்றுகொண்டு ஒரு சிறுவன்போன்று ஹிருதயர் தேம்பித்தேம்பி அழுதார். என்ன அதிசயம்! பரமஹம்சதேவர் கண்களிலும் கண் ணீர் அரும்பியிருந்தது. தம் கரங்களால் அவர் அவைகளைத் துடைத்தார். பரமஹம்சதேவ ருக்கு ஹிருதயர் கொடுத்து வந்த இன்னல் கள் எண்ணிக்கையில் அடங்கா. அப்படியிருந் தும் அவருக்காகவென்று பரமஹம்சதேவரும் கண்ணீர் மல்கினார்.

பரமஹம்சதேவர்: "இப்பொழுது இங்கே நீ ஏன் வந்திருக்கின்றாய்?"

ஹிருதயர் (புலம்பிக்கொண்டு): "தங்களைக் காண நான் வந்திருக்கின்றேன். என்னு டைய துயரங்களை நான் வேறு யாரிடம் உரைப்பது?"

பரமஹம்சதேவர் புன்னகை பூத்தார். ஆறு தல் அளிக்கும் பாங்கில் அவர் இயம்பியதா வது. "உலகில் இத்தகைய துயரங்களைத் தவிர்க்க யார்க்கும் இயலாது. இவ்வுலக வாழ்க்கையில் இன்பமும் துன்பமும் தவிர்க்க முடியாதவைகள். (மகேந்திரரைச் சுட்டிக் காட்டி) ஆகையினால்தான் இத்தகையவர்கள் இங்கே இடையிடையே வருகின்றனர். கடவு ளைப்பற்றிய பேச்சுக்களைக் கேட்டு அவர்கள் மன அமைதி அடைகின்றனர். உன் குறை யாது?"

ஹிருதயர்: (அழுது கொண்டிருந்தபடியே) "தங்களிடமிருந்து நான் துரத்தி ஓட்டப்பட்ட வனாக இருக்கிறேன். ஆகையால் நான் துயரப் படுகிறேன்."

பரமஹம்சதேவர்: "அதெப்படி! உங்கள் போக்கில் நீங்கள் போங்கள். என் போக்கில் நான் போகிறேன் என்று இயம்பியவன் நீயல்லவா?"

ஹிருதயர் : "ஆம் நான் அப்படித்தான் சொன்னேன். ஆயினும் நான் அறிந்துகொண்டது என்ன ?"

பரமஹம்சதேவர்: "இப்பொழுது உன்னிடமிருந்து நான் விடைபெறுகிறேன். மற்றொரு நாள் நீ இங்கு வா. அப்பொழுது நாம் கூடிப் பேசுவோம். இன்று ஞாயிற்றுக்கிழமை. பல பேர் என்னைக் காண வந்திருக்கின்றனர். அவர்கள் அறையில் காத்திருக்கின்றனர். அப்பக்கத்தில் பூமியில் நல்ல விளைவு உங்களுக்கு வாய்த்ததா?"

ஹிருதயர் : "மோசமில்லை."

பரமஹம்சதேவர் : "நல்லது சென்றுவா. மற்றொருநாள் வந்துசேர்."

ஹிருதயர் பரமஹம்சர் முன்னிலையில் மறுபடியும் வீழ்ந்து வணங்கினர். பரமஹம்சதேவர் மகேந்திரரோடு அறைக்குத் திரும்புவாராயினர்.

பரமஹம்சதேவர் (மகேந்திரரைப் பார்த்து): "எனக்குப் பணிவிடை செய்துகொண்டிருந்தற்கிடையில் அவன் என்னைப் படாதபாடு படுத்தினன். வயிற்றில் எனக்கிருந்த உபத்திரவம் என்னை எலும்பும் தோலுமாக மாற்றிவிட்டது. எதையும் அருந்த எனக்கு இயலவில்லை. அப்பொழுது ஒருநாள் அவன் என்னிடம் இயம்பியதாவது: என்னைப் பாருங்கள்—எவ்வளவு நன்றாக நான் அருந்துகிறேன்! சாப்பிடமுடியவில்லை என்று சொல்லுவது உங்களுடைய போக்காக அமைந்துவிட்டது. மீண்டும் அவன் இயம்பியதாவது : 'நீங்கள் ஒரு மடையன். உங்களோடு நான் வசித்திராது போயிருந்தால் உங்களுடைய தெய்வீகப் பாசாங்குகளெல்லாம் என்ன பாடுபட்டிருக்கும் என்று தெரியுமா?' ஒரு நாள் அவன் என்னைச் சித்திரவதை பண்ணுவதுபோல் நடந்துகொண்டான். அப்பொழுது கங்கை பெருக்கெடுத்து ஓடிக்கொண்டிருந்தது. கரையில் நின்றுகொண்டிருந்த நான் அந்நதியினுள் குதித்து உடலை ஒழித்துவிடலாமா என்று எண்ணினேன்."

இக்கூற்றைக் கேட்ட மகேந்திரர் ஸ்தம்பித்துப் பேச்சற்றுப்போனர். இத்தகைய மனிதனுக்கா இவர் இப்பொழுது சில சொட்டுக் கண்ணீர் சிந்தினர்!

பரமஹம்சதேவர் (மகேந்திரரைப் பார்த்து): "சரி இப்பெயர்வழி எனக்கு ஏராளமாகப் பணிவிடை பண்ணினன். அத்தகையவனுக்கு இத்தகைய தௌர்ப்பாக்கியம் வருவானேன்? பெற்றோர் குழந்தை ஒன்றைப் பரிபாலித்து வருவது போன்று அவன் என்னைக் காப்பாற்றி வந்தான். என்னைப்பொறுத்த வரையில் அல்லும் பகலும் பிரபஞ்ச ஞாபகமற்றவனாய் நான் அதீதத்தில் திளைத்திருந்தேன். மற்றும் ஒரு தடவை நான் நெடுநாளாக நோய்வாய்ப்பட்டிருந்தேன். முற்றிலும் அவனுடைய இரக்கத்தையும் அனுதாபத்தையும் சார்ந்தவனாக நான் இருந்தேன்."

இதற்கு என்ன பதில் உரைப்பது என்று தெரியாது மகேந்திரர் மௌனமுற்றிருந்தார்.

பரமஹம்சதேவர் சோலையினின்று திரும்பி வந்து தமது அறையிலிருந்த சிறிய கட்டிலின் மீதமர்ந்தார். அவருடைய வருகைக்காகப் பக்தர்கள் ஆவலோடு காத்திருந்தார்கள். கொன்னகர் என்னும் ஊரிலிருந்து வந்திருந்த பக்தர்களுள் ஒருவர் கேள்வி ஒன்றைக் கிளப்பினர்.

பக்தர் : "ஐயனே, தாங்கள் அடிக்கடி சமாதிநிலை எய்துகிறீர்கள் என்றும் பிரபஞ்ச உணர்வைத் தாண்டி அப்பால் போய்விடுகிறீர்கள் என்றும் நாங்கள் கேள்விப்படுகிறோம். அது எப்படி என்பதைத் தயைகூர்ந்து எங்களுக்கு விளக்குங்கள்.

பரமஹம்சதேவர்: "ஸ்ரீமதி ராதை மகாபாவம் என்னும் பாரமார்த்திகப் பெருநிலையெய்தினள். அந்நிலையில் அவள் இருந்தபொழுது கோபிமார்களுள் யாரும் அவளுடைய மேனியைத் தொட அனுமதிக்கமாட்டார்கள். இப்பொழுது ஆங்கு இருப்பது ஸ்ரீகிருஷ்ண சொருபம். அம்மேனியைத் தொட்டுக் கிருஷ்ண லீலைக்கு இடைஞ்சல் பண்ணவேண்டாம்" என்றார்கள். ஈஸ்வரானுபூதி வாய்க்கப் பெருதவர்களுக்குப் பாவ சமாதியோ, மகாபாவ சமாதியோ வாய்க்கமாட்டா. மீன் ஒன்று நீரின் மேற்பரப்புக்கு வந்து மீண்டும் கீழே மூழ்குகின்றபொழுது நீரின் மேற்பரப்பில் சலனம் தென்படுகிறது. அதே பாங்கில் சாதகனொருவன் சமாதியில் மூழ்குகின்றபொழுது ஆடலும், அழுகையும், சிரிப்பும் புறத்தில் தென்படுகின்றன. அகத்தில் இருப்பது என்ன என்பதை விளக்கமுடியாது."

# பராபரக் கண்ணி

( தாயுமானவர் இயற்றியது )

364. பாட்டுக்கோ அன்பினுக்கோ
பக்திக்கோ அன்பர்தங்கள்
நீட்டுக்கெல் லாங்குறுகி
நின்ருய் பராபரமே.

ஈண்டுக் குறித்துள்ள முறைகள் யாவும் பரமனை அடைவதற்கு உற்ற உபாயங்களாகின்றன. பாடும் திறமை எல்லார்க்கும் வாய்ப்பதில்லை. அக்கலை வாய்க்கப் பெற்றுள்ள பக்தர்கள் சிலர் அதை இறைவனுடைய மகிமைகளை விளக்குதற்கென்றே பயன்படுத்துகின்றனர். அக்கலை பெறுதற்கரிய பேறு ஆகிறது. தொண்டர்களில் சிலர் தெய்வத்துக்குப் பூமாலை தொடுத்து அதைச் சாத்தி வணங்குகின்றனர். அத்தகைய தொண்டின் வாயிலாக அவர்கள் அண்ணலின் அருளுக்கு இலக்கு ஆகியிருக்கின்றனர். பின்பு பூமாலையிலும் மிக்கது பாமாலை. பூமாலையோ அன்றன்று வாடிப் பயனற்றுப் போகின்றது. அதைத் தொடுத்துச் சாத்திய சாதகன் ஒருவனுக்கு மட்டும் அப்போதைக்கப்போது பயன்பட்டது. மற்று பாமாலையின் பாங்கு அத்தகையதன்று. பூமாலை ஸ்தூல நிலையிலிருக்கிறது. பாமாலையோ உணர்ச்சி ததும்பிய கருத்துக்கள் மயமாக உள்ளத்திலிருக்கிறது. ஒருவர் சூட்டிய பூமாலையை மற்றொருவர் இறைவனுக்குச் சூட்டலாகாது. பாமாலையை எத்தனைபேர் வேண்டுமானாலும் எத்தனை தடவை வேண்டுமானாலும் சூட்டிக்கொண்டே யிருக்கலாம். செல்லுகின்ற இடங்களுக்கெல்லாம் பாமாலையை எடுத்துச் செல்லலாம். காலத்தையும், இடத்தையும் முன்னிட்டுப் பாமாலை பழுதுபட்டுப் போவதில்லை. பாமாலைக்குப் பரமன் செவிசாய்த்துள்ள நிகழ்ச்சிகள் பல உள. ஆதலால் தானே தொடுத்த அல்லது சான்றோர் தொடுத்த பாமாலைகளைப் பயன்படுத்த ஆத்ம சாதகர்கள் கடமைப்பட்டிருக்கிருர்கள். பாமாலை சூடுவது அல்லது இறைவனைப்பற்றிய பாட்டுக்களை உருக்கத்தோடு பாடுவது நல்ல ஆத்மசாதனமாகிறது. பாமாலை அமைக்கவல்ல ஆற்றல் பெற்றவர்களுள் சிலர் அக்கலையை நர ஸ்துதிக்குப் பயன்படுத்தி அதைக் கீழ் நிலைக்குக் கொண்டுவருகின்றனர். பாடல் எவ்வளவு அற்புதமாக அமைந்திருந்தாலும் நர ஸ்துதி மயமாயிருக்கிற பாடல்களை ஆத்ம சாதகர்கள் கையாளலாகாது. நர ஸ்துதி தெய்வபக்திக்கு இடைஞ்சல்.

ஜீவாத்மனுக்கும், பரமாத்மனுக்கும் உள்ள இணக்கம் அன்பில் துவங்கி பக்தியில் பூர்த்தியாகிறது. இறைவனுடைய மகிமைகளெல்லாம் அறிந்து கொள்ளுதற்கேற்ப அவனிடத்து அன்பு உருவெடுக்கிறது. அது உயர்நிலையெய்துங்கால் பக்தி என்னும் பெயர் பெறுகிறது. பக்திவலையில் படுவோன் காண்க என்பது கோட்பாடு. பக்தி ஓங்க ஓங்க ஆத்ம சாதகன் தன்னுடைய ஜீவவியக்தியை மறக்கிருன். பரமனுடைய சொருபத்திலேயே அவன் திளைத்திருக்கிருன். கண்ணனோடு கூடி விளையாடிய கோபாலர்கள் அவனுடைய இணக்கத்தை அன்பின் மூலமாகப் பெற்றனர். ஒரு சிலர் அன்பு பூணுவதற்குமேல் அந்த இணக்கத்தை மேல் நிலைக்குக் கொண்டுபோகவில்லை. ஸ்ரீமதி ராதை போன்றவர்கள் பரா பக்தி வாய்க்கப்பெற்றுத் தங்களுடைய சொருபங்களையே கண்ணனுடைய அகண்ட சொருபத்தில் லயப்படுத்தினர்கள். பக்தி அந்நிலையில் பூர்த்தியானது.

நீட்டுதல் என்னும் சொல் ஈதல் கொடுத்தல் படைத்தல் எனப்பொருள்படுகிறது. ஆகுதியாக வேள்வியில் கொடுத்தலும் படைத்தல் என்பதில் அடங்குகிறது. மானுடன் ஒருவன் இரக்கத்தோடு ஏழை எளியவர்களுக்குப் பொருளை வழங்குவது ஈதல் எனப்படுகிறது. அது ஆத்மசாதனமாகாது. கொடுத்தல் தனக்கு நிகராக இருப்பவனுக்கு வழங்குதல், அதுவும் ஆத்மசாதனமாகாது. படைத்தல் ஒன்றே ஆத்ம சாதனமாகும். பக்தர்கள் எல்லாரும் தங்களுடைய வாழ்வைப் பரம்பொருளிடத்துப் படைத்துள்ளார்கள். பரமனுக்கென்றே பணிவிடை புரிந்துள்ளார்கள். விறகுக்கட்டை தன்னைத் தீயினிடம் ஒப்படைக்கிறது. அதன் விளைவாக அது தானே தீ ஆகிறது. அங்ஙனம் பரமனுக்கென்றே தங்களை ஒப்படைத்தவர்களிடத்து

இறைவன் குறுகி நிற்கின்றார் அல்லது தன்மய மாக அவர்களை அவர் அமைத்து வைக்கிறார் என்பது இக்கண்ணியின் கருத்து.

365. முத்தாந்த வித்தே
முளைக்குநில மாயெழுந்த
சித்தாந்த மார்க்கச்
சிறப்பே பராபரமே.

சாகுபடியின் விளைவாக நல்ல விளைவு எடுக்கப்படுகிறது. பாரமார்த்திகப் பெருவாழ்வு இக்கண்ணியிலே சாகுபடியோடு ஒப்பிடப்படுகிறது. நல்ல பூமியில் முதிர்ந்த வித்தை முறையாகப் பருவத்தே விதைத்தால் அது நல்ல விளைவாக வடிவெடுப்பது உறுதி. ஜீவாத்மன் பிரபஞ்ச வாழ்வினின்று தன்னை விடுவித்துக் கொண்டு பரம்பொருளோடு ஒன்றுபடுவது முக்தியாகிறது. அத்தகைய முக்திக்கு முயற்சி பண்ணுவது வாழ்க்கையின் மேலாம் குறிக்கோள். பூமியிலே வித்தை நடுவதோடு அச் செயல் ஒப்பிடப்படுகிறது. முக்தி மார்க்கம் மனநிலையைப் பொறுத்திருக்கிறது. இடையறாது உலகவாழ்வில் ஈடுபட்டுக் கிடந்த மனமானது தன்னை உலகவாழ்வினின்று விடுவித்துக்கொள்வதும் பரநாட்டத்தில் அது சதா ஈடுபட்டிருப்பதும் முக்தி மார்க்கமாகும். பண்பாட்டுக்கு ஏற்றபடி முக்தியில் நாட்டம் தலைத்தரமாகவோ இடைத்தரமாகவோ கடைத்தரமாகவோ அமைகிறது. தரத்திற்கேற்றபடி முன்னேற்றம் விரைவில் அல்லது காலாந்தரத்தில் நிறைவேறுகிறது. எவ்விதத்திலும் முக்தி நெறியில் ஈடுபட்டிருப்பவன் பரமனை அடைவது திண்ணம். முக்தி நாட்டம் என்னும் விதையை எத்தகைய பூமியில் நடுவது என்பது அடுத்த கேள்வி. நல்ல விளைவைப் பெற விரும்புகிறவர்கள் பூமியை நன்கு பண்படுத்தக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஈண்டு பண்பட்ட நிலத்தோடு சித்தாந்த மார்க்கம் ஒப்பிடப்படுகிறது. சித்தாந்தம் என்னும் சொல் தீர்மானிக்கப்பட்ட முடிவு எனப் பொருள்படுகிறது. ஓர் ஊரிலிருந்து மற்றோர் ஊருக்குப் போகப் பாதைகள் இன்னின்ன இருக்கின்றன என்ற கருத்து எடுத்துக்கொள்ளப்படுகின்றது. போக்குவரத்துக்குரிய வண்டி வாகனங்களைப்பற்றிய ஆராய்ச்சி அடுத்தபடியாக எடுத்துக்கொள்ளப்படுகிறது. வசதியுடன் விரைவில் செல்லுகிற வண்டியே பொருத்தமானது என்னும் முடிவுக்குப் பயணம் போகிறவன் வருகிறான். இத்தனை விதமான பாதைகளுள் இத்தனை விதமான போக்குவரத்து வாகனங்களுள் இன்ன பாதையில் இன்ன வாகனத்தைக் கொண்டு பயணத்தை நிறைவேற்றுவேன் என்று தீர்மானிப்பது சித்தாந்தப்படுத்துவது என்று பொருள்படுகிறது. பரமனை அடைவதற்கான சமயங்கள் பல உள. ஒவ்வொரு சமயவாதியும் அவனவன் கடைப்பிடிக்கும் மார்க்கமே மேலானது என விவகரிப்பான். நடுநிலையிலிருந்து ஆராய்ச்சி பண்ணுகிறவனுக்கு எல்லாச் சமயங்களும் மேலானவைகளே என்பது நன்கு விளங்கும். சமயங்கள் யாவும் இறைவனுடைய திருவுளப் பாங்கின்படி அமைந்தவைகளாம். அந்தந்தச் சரீரத்திற்கேற்ற உணவு வகைகள் பலப்பல இருப்பது போன்று மனப்பான்மைக் கேற்றவாறு சமய மார்க்கங்களும் பலப்பல உள. அவைகளுள் இன்ன சமயத்தை இன்ன முறையில் அனுஷ்டிப்பேன் என்று முடிவு கட்டுவதைச் சித்தாந்தப்படுத்துதல் என்று சொல்லுகின்றோம். ஒவ்வொரு ஆத்ம சாதகனும் அவனவனுடைய இயல்புக்கேற்ற சமயத்தை அனுஷ்டிப்பதே சாலச் சிறந்த முறையாகும். ஒரு வழிபாட்டு முறையில் ஒருவன் வேகமாகச் செல்ல முடியும். மற்றொரு வழிபாட்டு முறையில் இன்னொருவன் வேகமாகச் செல்ல முடியும். அவனவனுக்குகந்த மார்க்கத்தைச் சித்தாந்தப்படுத்துவது அவனவனுடைய கடமையாகும். விரைந்து பரமனைச் சென்றடைவது வாழ்க்கையின் குறிக்கோள். மார்க்கங்களைப்பற்றி விவாதிப்பது குறிக்கோளாகாது. ஆகவே ஆத்ம சாதகனொருவன் முக்தி மார்க்கத்திலே தான் கடைப்பிடிக்கும் சமய அனுஷ்டானத்தில் தீவிரமாக ஈடுபட வேண்டுமென்பது வாழ்க்கையின் குறிக்கோள். மலையுச்சியை யெட்டுவதற்கு மலையின் எப்பக்கத்தினின்றும் மேலே ஏறலாம். மலையுச்சி எல்லார்க்கும் பொதுவானது. அங்ஙனம் இறைவன் எல்லார்க்கும் பொதுவானவன். ஆதலால் அவன் சிறப்பு என்று இக்கண்ணியிலே போற்றப்பெறுகிறான்.

# பரபோதம்

(ஸ்ரீ ராமகிருஷ்ணரின் அருட்செல்வரான சுவாமி பிரம்மானந்தரின் போதனை)

ஜபம், தியானத்தை முறையாகச் செய்து வரும்பொழுது உன் மனம் பண்பட்டு வருகிறது. ஜபமும், தியானமும், செய்கின்ற செயல்களும், சித்தத்தைத் தூய்மைப்படுத்துவதாக இருக்கவேண்டும். சித்தம் தூய்மையடைகிறபொழுது அங்குச் சாந்தி நிலவுகிறது. ஜபம், தியானம் நீ செய்துகொண்டு வருகின்றாய். ஆனால் உன் மனதில் சாந்தி உண்டாவதில்லை என்று வைத்துக்கொள். அப்பொழுது நீ ஜபம், தியானம் முறையாகச் செய்யவில்லை என்று பொருளாகிறது. ஜபம் தியானம் முறையாகச் செய்துவந்தால் உன் உள்ளத்தில் சாந்தியும் பேரின்பமும் உண்டாவதை நீ காண்பாய். மனத் தூய்மையும் மனச் சாந்தியும் நீ பெறுகின்ற ஒப்பற்ற பேறுகளாகின்றன. செல்வத்தின் மூலமோ, உலகக் கல்வியின் மூலமோ, பேர், புகழின் மூலமோ, பட்டம், பதவிகளின் மூலமோ நீ நிரந்தர சாந்தியைப் பெறமுடியாது. புற உலகில் நீ சாந்தியை எங்கும் பெறமுடியாது. உன்னுடைய அகம் திருந்தியமையும் பொழுதுதான் நீ சாந்தியைப் பெறமுடியும். உன் உள்ளத்தைத் திருத்தியமைத்து அதை இறைவனிடத்து ஒப்படைப்பதற்காக நீ இவ்வுலகுக்கு வந்திருக்கின்றாய். இதை நீ மறந்தால் உன் வாழ்வு அனர்த்தமாய்ப் போய்விடும். இதை நீ உணர்ந்தால் உன் வாழ்வு பெருவாழ்வாக மாறும். உன் மனது உலக விஷயங்களில் ஊக்கத்தோடும், உற்சாகத்தோடும் செல்லுமானால் அதை அடக்குவது மிகவும் கஷ்டம். பாரமார்த்திக விஷயங்களில் உன் மனது ஊக்கத்தோடும் உற்சாகத்தோடும்செல்லுமானால் அது அடங்குவதாகிறது. அடங்கிய மனது அரிய செயலை அமைதியாகச் செய்து முடிக்கிறது. அடங்காத மனது பொருந்தாத செயலைச் செய்து துன்பத்தை உண்டாக்குகிறது. மனம் அடங்கப் பெறுதார்க்கு வாய் ஏன் பராபரமே என்கின்றார் தாயுமானவர். மனம் அடங்கப்பெறுதவர்கள் வாய்ச்சாலம் உடையவர்களாக இருக்கிறார்கள். மனம் அடங்கப் பெற்றவர்கள் மௌனமாக இருந்து பாரமார்த்திகத்தை மக்களுக்கு வழங்கிக்கொண்டிருக்கிறார்கள். மௌனம் முடிந்த நிலை. நீ சாதனை செய்து அந்நிலையை அடைய முயல்வாயாக.

மனது சலிக்கும் தன்மை உடையது. சிற்சில சமயம் மனம் தியானம் செய்ய விருப்பம் கொள்ளாது. மனதோடு போராடியாக வேண்டும். சுகமாக இருக்கவும், சுலபமாக எதையும் பெறுவதற்கும் மனம் விரும்புகிறது. ஆனால் நீ எது ஒன்றைப் பெற விரும்பினாலும் அதற்காக அரும்பாடுபட்டாக வேண்டும். உன் மனதை ஸ்திரமாக்குவதற்கு முயல்வாயாக. நீண்ட நேரம் உட்கார்ந்து தியானம் பண்ணச் சிரமமாக விருந்தால் சிறிது படுத்துக்கொண்டும் ஜபம் செய்யலாம். ஆனால் உட்கார்ந்துகொண்டு சாதனம் பண்ணுவதுதான் நல்லது. உட்கார்ந்து தியானம் பண்ணும் பொழுதோ, ஜபம் பண்ணும் பொழுதோ தூக்கம் வர ஆரம்பிக்குமானால் எழுந்து நடந்து கொண்டு ஜபம் பண்ணலாம். விடாது ஜபம் பண்ணுவதன் மூலமாகவும், மேலான சிந்தனையில் மனதைச் செலுத்துவதன் மூலமாகவும் மனதை நீ உறுதிப்படுத்தலாம். மனம் விரும்பவில்லை என்பதை முன்னிட்டுத் தியானம் செய்வதை நிறுத்திவிடக்கூடாது. மனதோடு போராடியாகவேண்டும். உன்னுடைய லக்ஷியத்துக்கு மனதை ஒத்துழைக்கும்படி செய்வதற்குரிய சாதனைதான் ஆத்ம சாதனையாகும்.

மௌனம் கடைப்பிடிப்பது நல்லது. மனம் உலக விஷயங்களில் ஓடிக்கொண்டிருக்க அனுமதித்து விட்டு வாயை மட்டும் அசையாமல் வைத்திருப்பது முன்னேற்றத்தைத் தராது. அதற்குப் பதிலாகச் சத்விஷயங்களை வாய் பேசிக் கொண்டிருக்கலாம். மனம் அடங்கிப் பழகி விட்டால் சத்விஷயங்களை நினைத்துக் கொண்டு வாய்பேசாதிருக்கலாம். மனம் அடங்காதபொழுது சத்காரியங்களையும், சத்விஷயங்களையும் சரீரமும் வாயும் செய்து கொண்டிருக்கவேண்டும். மனதை அடக்கிப் பழகுவதுதான் முக்கியமானது. பயனற்ற பேச்சுக்களை நிறுத்திவிடு. மனதைப் பரத்தினிடம் வைத்துப் பழகு. அதுதான் மௌனத்

துக்கு விளக்கமாகும்.

தன்னம்பிக்கை மிகவும் அவசியமானது. தன்னம்பிக்கையுடன் நேர்மையாக உழைப்பவர்களுக்குத் தெய்வத்தின் உதவி வருகிறது. தெய்வ நம்பிக்கை வைத்து இறைவனுடைய நாமத்தை ஜபித்து வரவேண்டும். மனம் பரிசுத்தம் அடையும்பொழுது உண்மைப் பொருள் உனக்கு விளங்கும். வீண் குழப்பம் வேண்டாம். அமைதியாக இரு. பொறுமையாக இரு. போராட்டத்தை நிறுத்திவிடாதே. மெய்ப்பொருளை அடையும்வரை திடமனதுடன் போராடு. பொன்னை காலத்தை உலக விஷயங்களை எண்ணுதல் என்ற மனக்கோட்டையில் செலவிடுவது பொருந்தாது. உலக விஷயங்களை மனோராஜ்யம் செய்யாதே. உலக ஆசை உன்னிடத்தில் ஒருபொழுதும் தலை தூக்கக்கூடாதென்று தெய்வத்திடம் பிரார்த்தனை செய்துகொள். உன் பிரார்த்தனை மனப்பூர்வமாகவிருக்குமாகில் தெய்வத்தின் அருள் உனக்கு வரும். சாதனையில் எவ்வளவுக்கெவ்வளவு நீ தீவிரமாக ஈடுபடுகின்ருயோ அவ்வளவுக்கவ்வளவு உன் உள்ளம் தெளிவடைந்து வரும். உள்ளம் தெளிவடைவதற்கு ஏற்பத் தெய்வத்தின் அருளைப் பெறுவதும் உனக்கு எளிதாகிறது.

''மாரு அனுபூதி வாய்க்கினல்லால் என்மயக்கம்
தேருது என்செய்வேன் சிவமே பராபரமே''

என்கிருர் தாயுமானவர். வீட்டு ஈ சிலசமயம் நல்ல பொருள்களிலும், மற்றும் சிலசமயம் அசுசியான பொருள்களிலும் அமர்வது போன்று ஞான அனுபூதி வாய்க்காதவர்கள் உள்ளம் உலக விஷயங்களிலும் பாரமார்த்திக விஷயங்களிலும் மாறி மாறிப் போய்க்கொண்டே இருக்கும். ஞான அனுபூதியைத்தான் மாரு அனுபூதி என்கிருர் தாயுமானவர். உலகப் பொருள்கள் மனதை மயக்கிவிடுகின்றன. உலகப் பொருள்கள் அநித்தியமானவை என்பதும், அவை சுகம் தரா என்பதும் மனதுக்கு விளங்குவதில்லை. உலகக் கவர்ச்சியில் மனம் ஈடுபட்டுப் பரத்தை மறந்து இருப்பதுதான் மனதிலுள்ள மயக்கமாகும். மனதைத் தன்பால் இழுத்திருந்த அன்பு மனைவி காலமாகிச் சுடுகாட்டுக்கு எடுத்துப் போகும் பொழுது உலகம் அநித்தியம் என்பது லௌகிக மனிதனுக்கு விளங்குகிறது. மனைவியின் சரீரத்தைத் தகனம் செய்துவிட்டுவந்த பிறகு அவ்வெண்ணம் சிறிது சிறிதாக அகல ஆரம்பிக்கிறது. சிறிது நாட்களுக்குள் மற்ெருரு பெண்ணை மறு விவாகம்செய்துகொண்டு உலக வாழ்க்கை நடாத்தவேண்டுமென்று அவன் விரும்புகின்ருன். இந்த நிலைக்குத்தான் மயக்கம் என்று பெயர். இந்த நிலையில் இருந்து மனதை விடுவிக்க நீ தீவிர சாதனம் செய்யவேண்டும். சாதனத்தின் மூலமாக மனம் தெளிவடைந்து ஞான அனுபூதி உண்டாகும் பொழுது உன் மனம் மயக்கத்திலிருந்து விடுபடுகிறது. ஞான அனுபூதி உனக்கு வந்து வாய்க்கவேண்டுமென்று பரத்திடம் கசிந்துருகிப் பிரார்த்தனை செய்துகொள். ஞான அனுபவம் உண்டாகும்பொழுது மனம் மயக்கத்திலிருந்து விடுபட்டு ஆத்ம சொருபத்திலேயே லயித்திருக்கும்.

உடல் ஓயாது மாறி அமைந்துகொண்டிருக்கிறது. உடல் திட்பமுற்றிருக்கும்பொழுது அது தெய்வ வழிபாட்டுக்குப் பயன்படுகிறது. உடல் நோய்வாய்ப்பட்டிருக்கும் பொழுது அது தெய்வ வழிபாட்டுக்குப் பெரும் தடையாக இருக்கிறது. உடலைத் திட்பமுடன் வைத்திருந்து அதைத் தெய்வ வழிபாட்டுக்குப் பயன்படுத்தத் தெரிந்துகொள்வாயாக. இனி, மனதில் ஆசை புகுந்துள்ளபொழுது வாழ்வில் துன்பங்கள் பல உண்டாகின்றன. சாந்தியைக் கலைப்பதும், ஆனந்தத்தை மறைப்பதும் மனதிலுள்ள ஆசையாகும். ''நிராசைதான் தெய்வம்'' என்கிருர் தாயுமானவர். மனதை நிராசையின்கண் செலுத்துவதற்குத்தான் வைராக்கியம் என்று பெயர். உலக ஆசையைக் கடவுள் ஆசையாக மாற்றக் கற்றுக்கொள். ஒரு சக்தியை மற்ெருரு சக்தியாக மாற்றுவதை விஞ்ஞானம் காட்டித் தந்திருக்கிறது. உன் மனதிலுள்ள கீழான ஆசையை மேலான ஆசையாக மாற்றுவது சாத்தியம். அதைச் சாதனையின் மூலம் நீ செய்தாகவேண்டும். மனதில் மேலான ஆசை வளர்வதற்கு ஏற்பக் கீழான ஆசை அதிலிருந்து அகன்று போய் விடும். கடவுள் ஆசைதான் ஆசைகளுள் மேலான ஆசையாகிறது. அதை வளர்ப்பாயாக.

# சமய அனுஷ்டானம்

(சுவாமி விவேகானந்தர் 1900 ஆம் ஆண்டில் கலிபோர்னியாவிலுள்ள ஆல்மேடாவில் நிகழ்த்திய சொற்பொழிவு.)

நாம் சாஸ்திரங்களையும் மற்றும் பல நூல்களையும் படிக்கிறோம். குழந்தைப்பருவத்திலிருந்து பலவிதக் கருத்துக்களைப் பெற்றிருக்கிறோம். அவ்வப்பொழுது அக்கருத்துக்களை மாற்றி அமைக்கிறோம். கொள்கையளவில் சமயம் என்றால் என்ன என்பதை அறிவோம். சமயத்தை நடைமுறைக்குக் கொண்டு வருவதையும் நாம் அறிந்திருப்பதாக நினைக்கின்றோம். சமயத்தை நடைமுறைக்கு எப்படிக் கொண்டு வரலாம் என்ற கருத்தை இப்பொழுது உங்களுக்கு எடுத்துக் கூறப் போகின்றேன்.

நம்மைச் சுற்றிலும் நடைமுறைக்குரிய சமயத்தைப் பற்றிய பேச்சு நடப்பதை நாம் கேட்கின்றோம். நாம் கேட்டவற்றை எல்லாம் ஒரு கருத்துக்குள் அடக்கலாம். சகோதர மக்களுக்குப் பணிவிடை புரிவதென்பதே அவ்விதக் கருத்தாகும். சமயம் என்பது அவ்வளவுதானா? கிறிஸ்துவ சமயத்தின் செயல் முறையைப் பற்றி ஒவ்வொரு நாளும் இந்த நாட்டில் பேசப்படுவதைக் கேட்கிறோம். சகோதரமக்களுக்கு ஏதாவது நலம் செய்ய வேண்டும் என்பது செயல்முறைக் கிறிஸ்துவமதமாகிறது. அது தானா கிறிஸ்துவமதம்?

வாழ்க்கையின் இலட்சியம் என்ன? வாழ்க்கையின் குறிக்கோள் இவ்வுலகம்தானா? இவ்வுலகத்துக்கு அப்பால் ஒன்றும் இல்லையா? நாம் இப்பொழுது இருப்பது போன்றுதான் இருக்க வேண்டுமா? இதற்கு அப்பால் ஒன்றுமில்லையா? மனிதன் ஒரு யந்திரமா? யந்திரம் யாருக்கும் தொந்தரவு கொடுக்காமல் ஓடுகிறது. இன்றைக்கு மனிதன் அனுபவிக்கின்ற துயரங்கள்தாம் அவன் பெறக் கூடியவையா? இத்துயரங்களுக்கு அப்பால் அவனுக்கு ஒன்றும் தேவை இல்லையா?

பல மதங்களினுடைய உயர்ந்த லட்சியம் இவ்வுலகத்தோடு நின்றுவிடுகிறது. மக்களுள் பெரும்பாலோர் நோய், வறுமை, துன்பம் ஆகியவையில்லாத வாழ்வு அமையும் ஒரு காலத்தைக் கற்பனைபண்ணிக்கொண்டிருக்கின்றனர். எப்பொழுதும் தங்களைச் சுற்றி நல்ல காலமே இருக்கவேண்டும் என்று எதிர் பார்க்கின்றனர். வீதிகளைச் சுத்தம் செய்து அவைகளை அழகாக வைத்துக்கொள்ளுங்கள். அதுதான் செயல்முறைச் சமயம் என்று பொருள் படுத்துகிறவர்கள் உண்டு. மக்கள் எப்படி உலகத்தை அனுபவித்து வருகிறார்கள் என்பதை நாம் பார்க்கிறோம்.

இவ்வுலகச் சுகத்தை அனுபவிப்பதுதான் லட்சியமா? அதுதான் லட்சியம் என்றால் மானுடனாகப் பிறப்பது பெருந்தவறாகும். பூனை அல்லது நாய் உணவைச் சுவைத்து இன்பம் அடைவதுபோன்று உண்பதில் மனிதன் இன்பம் பெறமுடியுமா? மிருகக் காட்சிச் சாலைக்குச் சென்று அங்குள்ள மிருகங்கள் எலும்பிலிருந்து மாமிசத்தைக் கிழித்து உண்பதை நாம் பார்க்கலாம். அப்படிக் கிழித்துத் தின்று இன்பம் பெறுவதற்குப் பறவையாகப் பிறந்திருக்கலாம். அப்படித்தின்று இன்பம் பெறுவதற்கு மனிதனாகப் பிறந்திருப்பது தவறாகும். இந்திரிய சுகத்தைப் பெறுவதற்கு மானுடப்பிறவி அமைந்ததன்று. பல நூற்றுக்கணக்கான ஆண்டுகளாகப் போராடி மானுடப் பிறப்பு எடுத்தது இந்திரிய சுகத்துக்கென்றால் காலங்களெல்லாம் வீணாகப் போனவை ஆகின்றன.

சாதாரணப் பொருளில் சமயத்தைச் செயல் அளவில் கொண்டுவரும் கொள்கை எங்கே இழுத்துச் செல்லும் என்பதை எண்ணிப் பாருங்கள். மக்களுக்கு உதவிபுரிவதுசிறந்தது. ஆனால் அதுதான் சமயம் என்று கருதுவீர்களானால் லோகாயதத்தில் அகப்பட்டுக்கொள்கின்ற ஆபத்துக்குள்ளாவீர்கள். அத்துடன் நின்று விடுவது சமயம் அன்று. அது நாஸ்திகத்தைவிட மேலானதன்று. கிறிஸ்துவர்களாகிய நீங்கள் சகோதர மக்களுக்காகப்பாடுபடுவது, ஆஸ்பத்திரிகள் அமைப்பது ஆகியவற்றைத் தவிர வேறு ஒன்றையும் பைபிளில் காணவில்லையா? கடைக்காரன் ஒருவன் ஏசுநாதர் இப்படித்தான் கடை வைத்திருந்தார் என்று கூறுகிறான். ஏசுநாதர் கடையையோ பத்திரிகையையோ வைத்து நடத்தவில்லை.

அத்தகைய செயல்களெல்லாம் நல்லவைதாம். ஆனால் அது சமயத்துக்குப் பாலர் வகுப்புப் போன்றதாகும். பாலர் வகுப்போடு சமயம் நின்று விடுவதன்று.

உங்களுக்குக் கடவுள் நம்பிக்கை இருக்குமானால், நீங்கள் கிறிஸ்தவர்களாக இருப்பீர்களானால், ஒவ்வொரு நாளும் "உன் திருவுள்ளப்படி நடக்கும்" என்று சொல்லி வருவீர்களானால் நீங்கள் அப்படிச் சொல்வதைச் சற்று சிந்தித்துப் பாருங்கள். உன் விருப்பப்படி நிகழட்டும் என்று சொல்லும் பொழுதெல்லாம் இறைவா, என் விருப்பத்தை நீ நிறைவேற்றி வைப்பாய் என்றுதான் நினைக்கின்றீர்கள். அகண்ட மெய்ப்பொருள் தம் திட்டத்தை நிறைவேற்றிக் கொண்டிருக்கிறது. அப்பொருள் ஏதோ தவறு செய்துவிட்டதாகவும் நீங்களும் நானும் அதைத் திருத்தி அமைப்பதாகவும் நினைக்கின்றோம். இது என்ன அறியாமை! உலகத்தை அமைக்கும் சிற்பிக்குத் தொண்டு புரியும் வேலை ஆட்களாகிய நாம் அவருக்கு என்ன புகட்டப் போகிறோம்? இப்பிரபஞ்சத்தை அழுக்கு நிறைந்த இடமாக அவர் விட்டுவிட்டாரா? அதை நீங்கள் ஓர் அழகிய அரண்மனையாக அமைக்கப் போகின்றீர்களா?

வாழ்க்கையின் லட்சியம்தான் என்ன? புலன் இன்பம் பெறுவது வாழ்க்கையின் லட்சியம் ஆகுமா? அவ்வின்பம் நமக்கு உண்மையான இன்பம் ஆகுமா? இவ்வுலக வாழ்க்கை நம்முடைய லட்சியம் ஆகுமா? இவ்வுலக வாழ்க்கைதான் நம்முடைய லட்சியம் என்றால் இப்பொழுதே நாம் மாண்டு போகலாம். இன்னும் உலக வாழ்க்கை வாழ விரும்ப வேண்டியதில்லை. மனிதன் உலகவாழ்வில் அகப்பட்டு யந்திரம் போன்று உழைப்பதுதான் அவன் தலைவிதியாயின் கல், மண் போன்ற ஜடப்பொருள்கள் நிலைக்குத்தான் நாம் திரும்பிப்போய் ஆக வேண்டும். பசு ஒன்று பொய் சொன்னதையும், மரம் ஒன்று திருடியதையும் நீங்கள் எப்பொழுதாவது பார்த்திருக்கிறீர்களா? அல்லது கேட்டிருக்கிறீர்களா? அவை யந்திரங்கள் போன்று உழைக்கின்றன. அவைகள் தவறு செய்யா; ஆனால் ஜடவுலகில் அவைகள் வாழ்ந்து வருகின்றன.

உலகவாழ்க்கை சமயம் அன்று என்றால் உண்மையான சமயத்தின் லட்சியம்தான் என்ன? நாம் எதற்காக இங்கு வாழ்ந்து வருகின்றோம்? நாம் சுதந்திரர்களாக ஆவதற்கும், ஞானம் பெறுவதற்கும் வாழ்ந்து வருகின்றோம். சுதந்திரம் பெறுவதற்கு நாம் ஞானம் பெற வேண்டும். அதுதான் நம்முடைய வாழ்வின் லட்சியம். சுதந்திரம் என்பதுதான் உலக முழுவதும் எழுகின்ற குரல் ஆகும். விதையிலிருந்து வெளிவரும் செடி தரையைப் பிளந்துகொண்டு மேலே கிளம்பிவந்து வானுற ஓங்கி வளர்கிறது. அது செடியின் போராட்டமாகிறது. உங்களுடைய வாழ்க்கையிலும் சுதந்திரம் பெறுவதற்காக அத்தகைய போராட்டம் நிகழவேண்டும். நம்மைச் சுற்றிலும் உள்ள இயற்கை நம்மை அடக்க முயலுகிறது. ஆத்மா தன்னை வெளிப்படுத்த விரும்புகிறது. இயற்கையோடு போராட்டம் நிகழ்ந்து கொண்டே இருக்கிறது. சுதந்திரத்துக்காக நிகழும் போராட்டத்தில் அனேக பொருள்கள் நசுக்கப்பட்டு அழிகின்றன. இப்போராட்டத்தில் துன்ப துயரங்கள் ஏற்படுகின்றன. "நான்தான் வெல்லுவேன்" என்று இயற்கை கூறுகின்றது. "நான் வெற்றி அடைவேன்" என்று ஆத்மா பகர்கிறது. "சற்றுப் பொறும்; சிறிது இன்பத்தைத் தந்துவிட்டு உன்னைச் சமாதானப்படுத்துகின்றேன்" என்று கூறி இந்திரிய சுகத்தை இயற்கை தருகிறது. அவ்வின்பத்தை அனுபவித்து ஆத்மா மயக்கத்தில் ஆழ்கின்றது. ஆனால் அடுத்த க்ஷணம் சுதந்திரத்துக்காக ஆத்மா முறையிடுகின்றது. பல்லூழிகாலம் சுதந்திரக் குரல் உள்ளத்தில் ஒலித்துக்கொண்டிருப்பதை நீங்கள் கவனித்து இருக்கின்றீர்களா? ஏழ்மை நம்மை மயக்குறச் செய்கிறது. செல்வமும் நம்மை மயக்கத்தில் ஆழ்த்துகிறது. நாம் அறிவிலிகள். நாம் கற்றுப் பெறுகின்ற அறிவும் நம்மை ஏமாற்றுகிறது. இவ்வுலகில் திருப்தி அடைந்த மனிதனை இல்லை. அதிருப்திதான் துன்பத்துக்குக் காரணம். ஆனால் அதிருப்தியே நம்முடைய வளர்ச்சிக்கும் காரணமாக இருந்திருக்கிறது. இவ்வுலகைக்கொண்டு நாம் திருப்தி அடைந்திருக்கக்கூடாது. இந்த உலகம் எல்லாச் சுகங்களும் நிறைந்து சொர்க்கம் போன்று நாளைக்கு மாறிவிடுமானால் "இந்த உலகம் வேண்டாம்,

வேறு ஒன்று வேண்டும்'' என்று கேட்போம்.

அகண்டமான ஜீவாத்மா அகண்டமான ஒன்றைக்கொண்டு அன்றி, வேறு ஒன்றால் திருப்தி அடையாது. பேரவா பேரறிவைக் கொண்டுதான் திருப்தி அடைய முடியும். வேறு எதையும் கொண்டு பேரவாவைத் திருப்தி பண்ண முடியாது. உலகங்கள் தோன்றி மறையலாம். அதனால் என்ன? ஆத்மா அழியாது விரிவடைந்துகொண்டே இருக்கிறது. ஆத்மாவில் உலகங்கள் புகுந்து விடுகின்றன. நீர்த்துளிகள் கடலில் மறைவது போன்று ஆத்மாவில் உலகங்கள் மறைகின்றன. இந்த மறைந்துபோகும் உலகமா ஆத்மாவின் லட்சியமாகும்? கவிஞர்கள் எல்லாக் காலங்களிலும் திருப்தி அடையுங்கள் என்று கூறியபொழுதிலும் நாம் திருப்தி அடைய முடியாது. இவ்வுலக வாழ்க்கையில் திருப்தி அடைந்தவர்களாக யாரும் இருந்ததில்லை. தத்துவ ஞானிகள் உள்ளதைக்கொண்டு திருப்தி அடையுங்கள் என்று பகர்ந்திருக்கின்றனர். நமக்கு நாமே திருப்தி அடையலாம் என்று அறிவுரை கூறிக்கொள்ளலாம். ஆனால் நாம் திருப்தி அடைய முடியாது. இப் பூவுலகத்திலோ, விண்ணுலகத்திலோ ஆத்மாவைத் திருப்திபண்ணுவதற்கு ஒன்றுமில்லை. ஜீவன் கொள்ளும் பேரவாவின்முன் நக்ஷத்திரங்களும், இவ்வுலகங்களும், கீழுலகங்களும், மேலுலகங்களும், அண்டம் முழுவதும் பொருளற்றவைகளாகின்றன. அவைகளைப் பெறுவதற்கேற்பப் போதவில்லை என்ற நோய் வளர்ந்துகொண்டே இருக்கும். ஆசை என்பது கொடியது. ஆசையைப்பற்றிய உண்மையை அறிந்துகொள்ளாவிட்டால் அது கேட்டை விளைவிக்கும். ஆசையை மேலாம் ஆசையாக மாற்றிவிடுவோமானால் அவ்வாசை சுதந்திரம் அல்லது முக்தியடைவதற்கு உதவுகிறது. உலகத்திலுள்ள அனைத்தும் சுதந்திரம் பெறுவதற்கு ஓயாது ஓலமிட்டுக்கொண்டிருக்கின்றன.

சமயத்தை நடைமுறைக்குக்கொண்டுவருவது தான் எப்படி? சுதந்திரம் அல்லது முக்தி அடைவதே சமயத்தை நடைமுறைக்குக்கொண்டு வருவதாகும். இவ்வுலகம் சுதந்திரம் என்னும் லட்சியத்தை அடைவதற்கு உதவுமாயின் அது ஏற்புடையது. சுதந்திரம் என்னும் லட்சியத்தை அடைவதற்கு உதவாது, ஏற்கனவே உள்ள ஆயிரக்கணக்கான பந்தபாசங்களோடு மற்றொரு பந்தபாசத்தையும் உண்டு பண்ணுமாயின் உலகம் கேடுடையதாகிறது. உடைமை, கல்வி, அழகு ஆகியவை லட்சியத்தை அடைவதற்கு உதவிபுரிகின்றவளவு நலம் தருபவைகள் ஆகின்றன. சுதந்திரம் என்னும் லட்சியத்தை அடைவதற்கு அவைகள் உதவாவிடில் அவைகள் ஆபத்தானவை. இனி, சமயம் அனுஷ்டிக்கப்படுகிறதென்றால் அவைகள் யாவற்றையும் லட்சியத்துக்குப் பயன்படுத்த உதவுவதாகும். இம்மைப் பொருள்களையும், மறுமைப் பொருள்களையும் சுதந்திரம் என்னும் லட்சியத்தை அடைவதற்கு உதவுவதாக அமைத்துக் கொள்வதே சமயத்தை அனுஷ்டானத்துக்குக் கொண்டு வருவதாகும். நாம் பெறும் இவ்வுலக இன்பத்துக்குப் பரந்த ஹிருதயத்தையும் பெரிய உள்ளத்தையும் விற்க வேண்டியவர்களாக இருக்கின்றோம்.

உலகிலுள்ள நலம் கேடுகளின் தொகையைப் பாருங்கள். அதில் மாறுதல் இருக்கிறதா? பல யுகங்கள் கழிந்து போய்விட்டன. சமய அனுஷ்டானம் பல யுகங்களாக நிகழ்ந்து வந்திருக்கிறது. ஒவ்வொரு யுகத்திலும் பிரச்னை தீர்ந்துவிடும் என்று உலகம் நினைக்கிறது. ஆனால் பிரச்சினை தீராது இருந்தபடியே இருக்கிறது. ஒரு பிரச்சினை மற்றொரு பிரச்சினையாக மாறி அமைகிறது. பிரச்சினை கீல்வாத நோய் போன்று இடம் பெயர்ந்து போய்க்கொண்டே இருக்கிறது. ஓரிடத்தில் இருந்து அதை விரட்டி ஓட்டினால் அது மற்றொரு இடத்திற்குப் போகிறது. நூறு ஆண்டுகளுக்கு முன்பு மனிதன் கால்நடையாகச் சென்றான். அல்லது குதிரையின் மீது சவாரி செய்தான். இப்பொழுது அவன் புகை வண்டியில் சென்று மகிழ்ச்சியடைகின்றான். ஆனால் இப்பொழுது அவன் அதிகம் சம்பாதிக்க வேண்டிய நிலையில் இருக்கின்றான். புகை வண்டியில் செல்லும் மகிழ்ச்சி ஒருபுறம் இருக்க உழைத்துச் சம்பாதிக்க வேண்டிய துன்பம் மற்றொரு புறம் இருக்கிறது. இயந்திரங்கள் மூலமாக நன்மைகளும், தீமைகளும், விளைந்திருக்கின்றன. (தொடரும்)

# நம் தேசீய செல்வம்

(ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள் திருப்பராய்த்துறை தபோவனம் அந்தர்யோகத்தில் நிகழ்த்திய சொற்பொழிவு)

நம் தேசீய பொக்கிஷமாக இருப்பது தவம். தவத்தின் வாயிலாக மனிதன் தன்னுடைய மாண்பை, தெய்விகத் தன்மையைப் பாது காக்க முடியும். விவேகானந்த சுவாமிகள் ஐரோப்பாவில் அறிஞர் பெருமக்களிடையே பகர்ந்ததாவது: "மண்ணை நம்பி வாழ்ந்து வரும் உங்கள் நாட்டு மக்கள் மண்ணுக்கு இரையாகின்றனர். ஆத்ம சொருபத்தை நம்பி வாழும் இந்தியர்கள் அவர்களுக்கு வந்த எத்தனையோ நலன் கேடுகளுக்கு இடையில் அழிந்துபட்டுப்போகாமல் இருந்திருக்கின்றார்கள். இந்தியநாகரிகம் உலகின் மிகப்பழைய நாகரிகமாகும். இந்திய மக்கள் ஆத்ம சொருபத்தில் ஆழ்ந்த நம்பிக்கை உள்ளவர்களாக அதற்கேற்ற பெருவாழ்வு வாழ்ந்து வருவதால் இந்திய நாகரிகம் அழிந்துபட்டுப்போகாமலிருக்கிறது." 'மேலைத் தவத்தளவே யாகுமாம் தான் பெற்ற செல்வம்' என்பது கோட்பாடு. பொருள் செல்வம் அழிந்துபட்டுப்போகும். அருள் செல்வம் ஒருநாளும் அழியாது. அருள் செல்வமாகிய தவம் பல ஜன்மாந்தரங்களில் தபசிகளைச் சார்ந்து வந்திருக்கிறது. அருள் செல்வமாகிய தவம், தவமுடையாரை ஈடேற்றுவதற்குக் கடைசிவரை உதவியாக இருக்கிறது. தவம் என்றால் தஹித்தல் அல்லது உருக்குதல் என்று பொருளாகும். சூரியன் தவ சொருபமாக இருக்கின்றான். சூரியன் சர்வ காலமும் தஹித்துக்கொண்டிருக்கின்றான். சூரியனது தகன சக்திதான் உலகம் முழுவதற்கும் உயிர் ஊட்டுகிறது. கோடைக்காலத்தில் நிலத்தை உழுது எந்த அளவுக்குக் காயப் போடுகின்றோமோ அந்த அளவுக்குப் பூமியில் சத்து ஏறுகிறது. அங்ஙனம் மானுடன் எவ்வளவுக்கெவ்வளவு தவத்தில் ஈடுபடுகின்றானோ அவ்வளவுக்கவ்வளவு அவனிடம் தெய்விகம் ஓங்குகின்றது.

நாம் வழிபடும் தெய்வம் தவசொருபமாக இருக்கின்றார். கோரதபஸ்வி என்று பரமசிவனுக்கு ஒரு பெயர் உள்ளது. மகாதபஸ்வி என்று மஹாவிஷ்ணுவுக்குப் பெயர் உள்ளது. அன்னை பராசக்தி கன்னிகையாகவிருந்து தவம்புரிந்து வருகின்றாள். அன்னை பராசக்தி தன்னைச் சிவனுக்குத் தகுதியுடையவளாகத் திருத்திக் கொள்வதற்குத் தவம் செய்து கொண்டிருக்கிறாள். தவம் செய்கின்றவர்களால் அவள் நன்கு ஆராதிக்கப்படுகின்றாள். தபசிகளினுடைய தவத்துக்கு வலிவுதரும் பாங்கில் அம்பிகை அமைந்திருக்கின்றாள். பரவஸ்துவே தவ சொருபமாகத்தான் இருக்கின்றது. நாம் நம்மைத் தவசொருபமாக ஆக்குகின்றவளவு அருள்துறையில் மேலே போகின்றோம்.

ராமாயணத்தில் தவம் புரிகின்ற சந்தர்ப்பம் ராமனுக்கு வந்து அமைகின்றது. ராமன் யுவராஜா பட்டம் பெறுவதற்கு ஆயத்தமாகவிருந்தபொழுது தெய்வாதீனமாகப் பதினான்கு ஆண்டுகள் தவம் புரிவதற்கு வனத்துக்கு அனுப்பப்படுகின்றான். வனவாசம் பண்ணிய தன் மூலமாக அவன் வாழ்க்கை மேலான வாழ்க்கையாக மாறி அமைகிறது. தவம் முடிந்து பதினான்கு ஆண்டுகளுக்குப்பின் ராமன் அயோத்திக்குத் திரும்பி வந்தான். வனவாசம் போவதற்கு முன்பு இருந்ததைவிடப் பன்மடங்கு மேலான நிலையில் வனவாசம் முடிந்தபின் ராமன் திகழ்ந்தான். வனவாசம் செல்லுவதற்கு முன்பு ராமன் சீதையிடம் பகர்ந்ததாவது: "வனவாச வாழ்க்கை மிகவும் கஷ்டம். நீ அயோத்தியிலேயே இரு." அதற்குச் சீதை பகர்ந்ததாவது: "நான் பிரம்மச்சரிய விரதத்திலிருந்துகொண்டு தங்களோடு சேர்ந்து தவம்புரிவேன். நான் வனத்தில் அதிக காலம் இருப்பேன் என்று என் ஜாதகத்தில் உள்ளது. நான் தங்களோடு வனத்துக்கு வந்தால் ஜாதகப்பலனும் நிறைவேறியதாகிவிடும். ஆங்கு நான் தவத்தில் ஆழ்ந்து ஈடுபடுவேன்." இதைக்கேட்டதும் ராமன் தவக்கோலம் பூண்டு சீதையையும் தன்னுடன் அழைத்துக்கொண்டு தவத்துக்குச் சென்றான். ராமன் பதினான்கு ஆண்டுகள் வனத்திலிருந்து தவத்தில் ஈடுபட்டுத் தன் வாழ்க்கையைப் பெருவாழ்வாக மாற்றி அமைத்தான். ராமனுடைய ஜீவிதம் வனவாசத்துக்கு முன்பு இருந்ததைவிட வனவாசத்துக்குப் பின்பு பல படி மேலே போய்விட்

டது. பாண்டவர்களும் பதின்மூன்று ஆண்டு கள் தவத்தில் ஈடுபட்டிருந்தார்கள். அவர்கள் தவத்தில் ஈடுபட்ட அளவுக்குத் தங்கள் வாழ்க்கையை உயர்த்திக்கொண்டார்கள்.

''தவஞ்செய்வார் தங்கருமஞ் செய்வார் [மற்றல்லார்
அவஞ்செய்வார் ஆசையுட் பட்டு''

என்பது வள்ளுவர் வாக்கு. பாண்டவர்களும் கௌரவர்களும் இக்குறளுக்கு விளக்கமாக அமைகின்றார்கள். கௌரவர்கள் ஹஸ்தினபுரத்தில் ஆசைக்கு வசப்பட்டுப் பல அக்கிரமங்கள் செய்தார்கள். தங்களுக்கு ராஜ்யம் போதாது என்றும், தங்கள் தாயாதிகளின் ராஜ்யத்தை அபகரித்துக்கொள்ள வேண்டுமென்றும், தங்களுக்கே அனைத்தையும் உரியதாக்கவேண்டுமென்றும் பேராசை பிடித்தவர்களாக விருந்தார்கள். தங்களுடைய பேராசையை நிறைவேற்றிக்கொள்வதற்குப் பாண்டவர்களோடு போர் புரிவதற்கும் தங்களை ஆயத்தப் படுத்தினார்கள். பாண்டவர்களை ஒழித்து விடவேண்டுமென்று திட்டம் போட்டே அவர்களை வனவாசத்துக்கு அனுப்பினார்கள். கௌரவர்கள் அத்தகைய கெட்ட நோக்கத்தோடு நடந்துகொள்ள பாண்டவர்கள் தங்களுக்கு அமைந்த வனவாசத்தைத் தவத்துக்குப் பயன்படுத்தினார்கள். பாண்டவர்கள் வனவாச காலத்தில் தவத்தில் ஈடுபட்டு வாழ்வில் மேல் நிலைக்குப் போய்க் கொண்டிருந்தார்கள். மைத்திரேயி மகரிஷி யுதிஷ்டிர ராஜாவை வனத்தில் சென்று பார்த்தார். முனிகள், ரிஷிகள், தவசிகள் கூட்டத்தில் தாங்களும் சேர்ந்துகொண்டு பாண்டவர்கள் தவத்தில் மேலும் மேலும் உயர்நிலையை அடைந்துகொண்டிருந்தார்கள். அவர்கள் தவத்தில் ஓங்கியிருந்த நிலையை அவர்களோடு கொஞ்சம் நாள் தங்கியிருந்து மைத்திரேயி மகரிஷி அறிந்தார். அதன் பிறகு மைத்திரேயி மகரிஷி ஹஸ்தினபுரத்துக்கு வந்தார். வனத்தில் யுதிஷ்டிரரைச் சந்தித்து வந்தேன் என்று மைத்திரேயி மகரிஷி திருதராஷ்டிரரிடம் சொன்னார். பாண்டவர்கள் சௌக்கியமாக இருக்கிறார்களா? என்று திருதராஷ்டிரர் மைத்திரேயி மகரிஷியிடம் கேட்டார். சுருக்கமாகச் சொல்லவேண்டுமா, விஸ்தாரமாகச் சொல்ல வேண்டுமா என்று மைத்திரேயி மகரிஷி திருதராஷ்டிரரைக் கேட்டார். விஸ்தாரமாகவே சொல்லுங்கள் என்று திருதராஷ்டிரர் கூறினார். தவத்தில் பாண்டவர்கள்மேலே போய்க்கொண்டிருக்கின்ற ஒவ்வொரு நிலையையும் விளக்கமாக விரித்துச் சொன்னார். திருதராஷ்டிரர் இந்தக் கேள்வியை ஏன் கேட்டோம் என்று மனம் பொங்கினார். மைத்திரேயி மகரிஷி அடுத்துத் துரியோதனனிடம்வந்தார். அவனிடம் அவர் பகர்ந்ததாவது: "நீ அழிந்துபட்டுப் போவதற்காக யுத்தத்துக்கு ஆயத்தப்படுத்திக் கொண்டிருக்கின்றாய். பாண்டவர்கள் தவத்தின் மூலமாகத் தெய்விகப் பண்பாட்டில் மேலோங்கிவருகின்றார்கள். அவர்களுடைய தவ வலிமைக்கு முன் எந்தப் பலமும் எதிர்த்து நிற்க முடியாது." இதைக் கேட்டதும் துரியோதனன் ''என் கைவசத்தில் எவ்வளவு சேனைகள் இருக்கின்றன என்பதைப் பாருங்கள். என்னை யாரும் அசைக்க முடியாது. பாண்டவர்கள் வனவாச வாழ்க்கையை முடித்து விட்டு என்னோடு போருக்கு வருவார்களானால் அவர்களை ஒரு கை நான் பார்த்து விடுவேன்'' என்று தொடையைத் தட்டிக்கொண்டு சொன்னான். ''எந்தத் தொடையைத் தட்டி நீ பெருமை கொள்கின்றாயோ அந்தத் தொடையிலேயே நீ அடியுண்டு சாவாய்'' என்று மைத்திரேயி மகரிஷி சாபம் கொடுத்தார். கௌரவர்கள் உலக வாழ்க்கையில் மூழ்கியவர்களாக உலக சம்பத்தை மேலும் பலப்படுத்த முயன்றார்கள். அதன் மூலமாகத் தங்களுடைய அழிவுக்கு அவர்கள் வழிதேடிக் கொண்டார்கள். பாண்டவர்கள் பன்னிரண்டு வருஷம் வனவாச காலத்திலும், ஒரு வருஷம் அஞ்ஞாத வாசத்திலும் தவத்தில் ஆழ்ந்து ஈடுபட்டார்கள். அப்படி அவர்கள் தவத்தில் ஈடுபட்டு ஆக்கத்துக்கும், அருளுக்கும் வழிதேடிக் கொண்டார்கள். பண்பிலும் பலத்திலும் அவர்கள் தவத்தின் மூலமாக உயர்ந்த நிலையை அடைந்துவிட்டார்கள்.

ராமாயணம் மகாபாரதம் ஆகிய இரண்டு இதிகாசங்களில் நடு நாயகமாகவிருக்கும் ராமனும், பாண்டவர்களும் தவத்தின்மூலம் தங்களைப் பன்மடங்கு மேலானவர்களாக்கினார்கள். ஆயுள் முழுவதும் தவத்தில் ஈடுபட்டிருப்பது தான் மக்கள் யாவருடைய குறிக்கோளாகும்.

தவம் என்பது துறவியர்களுக்குமட்டும் உரிய செயல் என்று பலர் எண்ணுகின்றனர். குடும்பத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் தவத்தில் ஈடுபடவேண்டியது அவசியமில்லை என்று எண்ணுவது தவருகும். தங்களை மேலோராகத் திருத்தி அமைப்பதற்கு மக்கள் யாவரும் கடமைப்பட்டிருக்கின்ருர்கள். பிரம்மச்சரியம், கிருஹஸ்தம், வானப்பிரஸ்தம், சந்நியாசம் ஆகிய நான்கு ஆச்ரமத்திலிருப்பவர்களும் தவம் செய்யக் கடமைப்பட்டிருக்கிருர்கள்.

கீதையின் சாரமாக அமைந்திருக்கும் பகுதியில் கிருஷ்ணபரமாத்மா அர்ஜுனன் மூலம் உலக முழுவதுக்கும் தரும் செய்தியாவது:

**यज्ञदानतपः कर्म न त्याज्यं कार्यमेव तत् ।**
**यज्ञोदानं तपश्चैव पावनानि मनीषिणाम् ॥**

யக்ஞ தானதப : கர்ம ந த்யாஜ்யம் கார்யமேவதத்
யக்ஞோதானம் தபச்சைவ பாவனனி மனீஷிணும்

சரீரம் இருக்கும் பரியந்தம் யக்ஞம் செய்வதையும், தானம் செய்வதையும், தவம் செய்வதையும் நிறுத்திவிடக் கூடாது. யக்ஞம் பண்ணுவதன் வாயிலாகவும், தானம் பண்ணுவதன் வாயிலாகவும், தவம் பண்ணுவதன் வாயிலாகவும் சான்ருேர்கள் தங்களைச் சதா தூய நிலையில் வைத்துக்கொண்டிருக்கின்ருர்கள்.

கடவுள் வழிபாட்டில் ஆழ்ந்து ஈடுபடுவது யக்ஞம் ஆகிறது. மக்களுக்குப் பயன்படும் பாங்கில் வாழ்வது தானம் ஆகிறது. நாள்தோறும் தங்களை மேலானவர்களாகத் திருத்தி அமைப்பது தவம் ஆகிறது. தீவிரமாகக் கடவுள் வழிபாடு செய்வதும் மக்கள் நலனில் கண்ணுங்கருத்துமாக இருப்பதும் தங்களைத் திருத்தி அமைப்பதில் சிரத்தையோடு இருப்பதும் மேலான வாழ்வைத் தருகின்றன. அத்தகைய யக்ஞத்திலும், தானத்திலும், தவத்திலும் ஈடுபட்டிருப்பவர்கள் மானுட ஜன்மத்தை நன்கு பயன்படுத்துகின்றனர்.

அர்ஜுனன் புரிந்த தவத்தின் விளைவு எத்தகையது என்பதைப் பார்ப்போம். கௌரவர்களும், பாண்டவர்களும் துரோணச்சாரியர் என்னும் ஒரு குருவிடம் பயிற்சிபெற்ருர்கள். பயிற்சி காலம் முடிந்தபிறகு அவர்களுக்கிடையில் போட்டி ஒன்று வைக்கப்பட்டது. அப்போட்டி விளையாட்டில் அர்ஜுனனைத் தோற்கடிக்கக்கூடிய நிலையில் கர்ணன் இருந்தான். கர்ணன் இன்னுன் என்பது அவனுக்கே தெரியாது. தேரோட்டிமகன் என்று பெயர் பெற்றிருந்தான். அவனேடு அர்ஜுனனைப் போட்டிபோடவிடக் கூடாது என்று அப்போட்டியைச் சாமர்த்தியமாகத் துரோணச்சாரியர் தடுத்து நிறுத்திவிட்டார். வனவாச வாழ்க்கைக்குப் பிறகு பாண்டவர்கள் பாஞ்சால நாட்டில் நிகழ்ந்த திரௌபதையின் சுயம்வரத்துக்குமாறு வேடத்தில் வந்திருந்தார்கள். அர்ஜுனனும் மாறுவேடத்தில் அங்கு இருந்தான். கர்ணனும் போட்டி போடுதற்கென அங்கு வந்திருந்தான். அங்குள்ள இலக்கைக் கிட்டத்தட்ட கர்ணன் அடித்தான். வேறுயாரும் இலக்குக்குப் பக்கத்தில் வரமுடியவில்லை. மாறுவேடத்தில் இருந்த அர்ஜுனன் விளையாட்டுப் போன்று இலக்கை அடித்துவிட்டான். அர்ஜுனன் விளையாட்டுப் போன்று இலக்கை அடிக்கும் ஆற்றல் பெற்றிருந்தானெனின் அவ்வாற்றல் தவத்தின்மூலம் வந்ததாகும். வனவாச காலத்தில் அர்ஜுனன் தவத்தில் ஈடுபட்டு மேல்நிலைக்கு வந்தான். மகாபாரத யுத்தத்தில் ஜயத்திரதன் துரோணச்சாரியரைப் பார்த்துக் கேட்டதாவது: "நீங்கள் எல்லார்க்கும் சமமாக வில்வித்தை புகட்டினீர்கள். நாங்கள் அடிக்கின்ற வில் வலிவற்றதாக இருக்கின்றது. அர்ஜுனன் அடிக்கின்ற வில் துளைத்துக்கொண்டு போகிறது. அர்ஜுனனுடைய வில்லுக்கு அத்தகைய வலிவு எங்கிருந்து வந்தது? அதன் ரகசியம் என்ன?" ஜயத்திரதன் கேட்ட கேள்விக்குத் துரோணச்சாரியர் விடை பகர்ந்ததாவது: "நான் எல்லார்க்கும் ஒரேபாங்கில்தான் புகட்டினேன். நான் புகட்டியதைக் கற்றுக் கொண்டதோடு நீங்கள் நின்றுவிட்டீர்கள். ஆனல் அர்ஜுனன் தவத்தின் மூலமாக நான் புகட்டியதைப் பலப்படுத்தி இருக்கின்ருன். அர்ஜுனனுடைய வில்லுக்கு வலிவுவந்தது அவன்செய்த தவமேயாகும், அர்ஜுனன் தவத்தின் மூலம் தன் வில்வித்தையை வலிவுபடுத்திக்கொண்டான்."

நாம் யாவரும் வாழ்க்கையில் மேல்நோக்கிப் போயாகவேண்டும். வாழ்க்கையில் மேல்நோக்கிப் போயாக வேண்டுமானல் வாழ்வு முழுவதும் தவ சொரூபமாக மாறவேண்டும். போகத்தில் ஆசைவைப்பவர்கள், உலகப்

பொருளில் மிகைபட்ட ஆசைவைப்பவர்கள் அழிவைத் தேடுபவர்களாகின்றார்கள். தங்களைப் பக்குவப்படுத்துவதில் கண்ணும்கருத்துமாக இருப்பவர்கள் அழிந்துபட்டுப் போகும் பூலோக சம்பத்தில் கருத்துச் செலுத்தாது தவத்தில் தீவிரமாக ஈடுபடவேண்டும். மண்ணை நம்பி உங்கள் முன்னோர்கள் மண்ணுக்கு இரையானார்கள். ஆத்ம விஷயத்தில் நம்பிக்கை கொண்டிருந்த இந்திய ரிஷிகள் அழியாப்பெருநிலையை அடைந்தார்கள் என்று விவேகானந்த சுவாமிகள் மேனாட்டவர்களுக்குக் கூறினார். மேனாட்டவர்கள் போன்று மண்ணாசை பிடித்திருந்த கௌரவர்கள் கூட்டம் மண்ணுக்கு இரையானார்கள். தர்மத்தைக் கடைப்பிடித்து வந்த பாண்டவர்கள் பெருவாழ்வு வாழ்ந்தார்கள். மகாபாரதப் போரில் அழிந்துபட்டுப் போனவர்களைக் கிருஷ்ணன் காந்தாரிக்கு ஞானக்கண்கொடுத்துக் காட்டுகின்றார். அக்காட்சியைப் பார்த்துக் காந்தாரி பகர்ந்ததாவது: ''கண்ணா! நீ மனம் வைத்திருந்தால் இப்போரில் மடிந்துபோனவர்களையெல்லாம் காப்பாற்றி இருக்கலாம். நீ இவ்வளவு பேர் அழிந்துபோனதற்குக் காரணமாயிருக்கின்றாய். இந்தக் குரு வம்சம் அழிந்தது போன்று உன் யாதவவம்சமும் அழிந்துபட்டுப் போவதாகுக என்று உனக்கு நான் சாபம் கொடுக்கிறேன்.'' கண்ணன் சாபத்தை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டார். சாபத்தை ஏற்றுக்கொண்டு காந்தாரியிடம் கிருஷ்ணன் பகர்ந்ததாவது: "உங்கள் மகன் துரியோதனன் இவர்கள் யாவரும் அழிந்துபட்டுப் போனதற்குக் காரணமாவான். அவன் அதர்ம நெறியில் செல்லுவதற்குத் தடைபோடாது தாயும் தந்தையுமாகிய நீங்கள் அவன் போக்குப்படி விட்டு விட்டீர்கள். சான்றோர்கள் துரியோதனனுக்கு எவ்வளவோ புத்திமதிகள் கூறியும் அவன் ஏற்றுக்கொள்ளவில்லை. அவன் நடந்து கொண்ட முறை சரிதானா என்பதை யோசித்துப் பாருங்கள்.'' இதைக் கேட்டதும் கண்ணன் கூறியது மெய் என்பதைக் காந்தாரி ஒத்துக்கொண்டாள். கௌரவர்கள் பொருளாசை பிடித்தவர்களாக இருந்தார்கள். அவ்வாசை அவர்களை அழித்தது. யாதவ வம்சத்தினரும் சுகபோகத்தில் வரம்பு கடந்து மூழ்கினார்கள். எனவே அவர்களும் அழிவது தான் பொருந்தும் என்று காந்தாரி கொடுத்த சாபத்தைக் கிருஷ்ணன் ஏற்றுக்கொண்டார். யார் சுகபோகத்தில் மிகைபட ஈடுபடுகின்றார்களோ அவர்கள் அழிவுக்கு வழிதேடியவர்களாகிறார்கள். பூலோக சுகங்களை வரம்புக்கு உட்பட்டு அனுபவிக்கலாம். பாரமார்த்திகப் பெருவாழ்வுக்கு முரண்படாதபாங்கில்பூலோக சுகத்தில் ஈடுபடுபவர்களுக்கு ஆபத்து இல்லை. பஞ்சேந்திரியங்களின் வாயிலாக வருகின்ற சுகத்தில் பெருமிதமாக ஈடுபடுகின்றவர்கள் விரைவில் அழிந்துபட்டுப்போவதற்கு வழி தேடியவர்களாகிறார்கள். பஞ்சேந்திரிய சுகத்தில் மிகைபட ஈடுபடுவது யாருக்கும் பொருந்தாது. இப்பெரிய பாடத்தை மகா பாரதப் போர் நமக்குப் புகட்டுகிறது. கௌரவர்கள் பொருளாசை பிடித்தவர்களாகவும், மண்ணாசை பிடித்தவர்களாகவும் இருந்து அழிந்தார்கள். யாதவ கூட்டத்தாரும் மிகைபட்ட சுகஜீவனத்தில் ஈடுபட்டுத் தாங்கள் கிருஷ்ணனுக்குச் சொந்தம் என்ற வீண்கர்வம் பிடித்தவர்களாக இருந்தார்கள். அவர்கள் தங்களுக்குள் ஒருவரை ஒருவர் அடித்துக் கொண்டு மாண்டார்கள். அவர்கள் மூலம் உலகத்தவர்களுக்குப் பாடம் ஒன்று கிடைக்கிறது. பூலோகச் செல்வம் அபரிமிதமாக வாய்த்திருக்கலாம். ஆனால் நாம் அவற்றை அளவெடுத்த பாங்கில்தான் பயன்படுத்த வேண்டும். உலக போகத்தில் மிகைபட மூழ்கி உலக போகத்துக்கு நாம் அடிமைப்பட்டவர்களாக ஆகிவிடக்கூடாது.

உலகத்துக்கு நாதனாக இருக்கின்ற விசுவ நாதன் சுடுகாட்டை இருப்பிடமாகக் கொண்டிருக்கின்றார். பிரபஞ்சத்தில் நமக்கு ஒன்றும் சொந்தம் இல்லை என்பதை அவர் சதா புகட்டிக் கொண்டிருக்கின்றார். அவர் உடல் முழுவதும் சுடலைப்பொடி பூசி இருக்கின்றார். 'காடுடைய சுடலைப் பொடி பூசி' என்று ஞான சம்பந்தர் பாடுகின்றார். பிணத்தைச் சுட்டு எரித்த பின்பு ஏற்படும் சாம்பல்தான் சுடலைப் பொடியாகும். உடல் முழுவதும் அவர் சுடலைப் பொடிபூசி இருப்பது உடல் சாம்பலாகப் போகக்கூடியது என்பதை அறிவுறுத்துதற்கேயாம். அழிந்துபோகும் உடல் சுகத்தில்

கருத்துச் செலுத்துகின்றவளவு மனிதன் அழிவுக்கு வழிதேடுகிறுன் என்ற பாடத்தைச் சுடலேப்பொடி பூசியிருக்கும் சிவனர் நமக்குப் புகட்டுகின்ருர். சிவபெருமான் நமக்குப் புகட்டும் பாடத்தை அறிந்து அதன்படி வாழ்கின்றவர்கள்தாம் சிவபக்தர்களாகிருர்கள். நாம் இவ்வுலகத்தில் வாழ்ந்திருக்கலாம். ஆனல் மிகைபட உலகப்பற்று வைக்கக்கூடாது. ஆரோக்கியமான வாழ்வு வாழலாம். ஆனல் போகத்தில் கருத்துச் செலுத்தலாகாது. வாழ்வு முழுவதும் எவ்வளவுக்கெவ்வளவு தவ சொருபமாகத் திருந்தி அமைகின்றதோ அவ்வளவுக்கவ்வளவு நாம் மேன்மை அடைகின்ருேம். தவத்தின் மூலம் மரணமிலாப் பெருவாழ்வுக்கும் நம்மை ஆயத்தப்படுத்துகின்ருேம்.

"உற்றநோய் நோன்றல் உயிர்க்குஉறுகண் [செய்யாமை
அற்றே தவத்திற்கு உரு"

என்பது வள்ளுவர் வாக்கு. நம்மைப் பிடித்துள்ள நோய்களுள் மிகப்பெரிய நோய் பசிப்பிணி என்ற நோயாகும். பிறப்பது இறப்பது மயமாக நம் வாழ்வு பலகோடி யுகங்களாக இருந்து வந்திருக்கிறது. இத்தனைப் பிறப்புக்களிலும் பசிப்பிணிக்கு நாம் ஆளாகி இருக்கின்ருேம். இந்த நோயை நீக்குவதற்கு உற்ற உபாயம் தவமாகிறது. உலக வாழ்க்கை நிகழ்வதற்குப் பல உயிர்களும் ஒன்று சேர்ந்தாக வேண்டும். எந்த உயிர்க்கும் உபத்திரவம் செய்யலாகாது. மற்ற உயிர்களுக்கு நம் வாழ்வு உபத்திரவமாகவிருக்கக் கூடாது.

'சர்வபூத ஹிதே ரத:' என்ற கோட்பாட்டின்படி யார் ஒருவன் எல்லா உயிர்களின் நலத்தில் கண்ணும் கருத்துமாக இருக்கின்ருனே அவன் தன் வாழ்வைச் செப்பனிடுபவன் ஆகின்ருன். பிற உயிர்களுக்கு எவ்வளவுக்கெவ்வளவு துன்பம் செய்கின்ருனே அவ்வளவுக்கவ்வளவு அவன் தனக்கே அழிவு தேடிக்கொள்பவனுகின்ருன். வேறு எந்த உயிருக்கும் தீங்கு செய்யாது நலனே செய்யும் பாங்கில் ஒருவன் வாழ்ந்து வருவானுகில் அவன் தவ வாழ்வு வாழ்பவனுகின்ருன். பிற உயிர்களின் நலத்தில் தன்னை மறந்து உயிர்களிடத்து அன்பைப் பெருக்குவது மனதைத் திருத்துவதற்குரிய தவமாகிறது.

பிறப்பு இறப்பு அற்ற பரமனிடத்தில் மனதைச் செலுத்துவது பிறவிப் பிணியை நீக்குவதற்கு உபாயமாகிறது.

தியாகத்தின் வாயிலாகவே மரணமிலாப் பெருநிலையை அடைந்து ஆத்ம சொருபத்தில் மனிதன் லயமாகின்ருன். கர்மத்தை ஏராளமாகப் புரிந்து உலக சம்பத்தை வேண்டுமளவு பெருக்கலாம். அப்படிப் பெருக்குவது மேலும் பந்தபாசத்தைத்தான் வளர்க்கிறது. சந்தான விருத்தியைவேண்டியவாறு செய்யலாம். அதுவும் பந்தபாசத்தை உண்டுபண்ணுகிறது. செல்வத்தைவேண்டியவாறு பெருக்கலாம். செல்வம் அவன் அழிந்து போவதற்கு ஏதுவாகிறது. உயிர்களுக்கிடையில் தேன் ஈ அருமையான சமுதாயவாழ்க்கை வாழ்கிறது. தியாகத்திற்குத் தேன் ஈ சான்ருக இருக்கிறது. தேன் ஈ மிகைபடத் தேனைச் சேகரிக்குமானல் தேன் அடையின் எடை அதிகரித்து நழுவிக் கீழே விழ ஏதுவாகும். அப்பொழுது தேன் ஈக்கள் யாவும் அழிந்துபட்டுப் போகும். ஆகையால் மிகைபடத் தேனைச் சேகரிப்பது தேன் ஈக்களின் அழிவுக்குக் காரணமாகிறது. மக்களில் பெரும்பான்மையோர் செல்வத்தை மிகைபடத் தேடி வைக்கின்றனர். அவர்கள் அழிந்து போவதற்கு அவர்கள் தேடிய செல்வமே காரணமாகிறது. தேன் ஈக்குத் தேன் அவசியமாக இருப்பது போன்று மக்களுக்குச் செல்வம் அவசியம். மிகைபட்ட செல்வம் ஒருவனிடம் சேருமானல் அச்செல்வமே அவனை அழித்து விடுகிறது. தேவைக்கு ஏற்ற செல்வத்தைப் பெற்று எளிய வாழ்க்கை வாழ்ந்து செல்வத்தில் பற்றற்று இருக்கக் கற்றுக்கொள்வது அவசியமாகிறது. சிவபெருமான் சுடுகாட்டில் வசித்து வருகிருர். விசுவத்துக்கே அவர் தலைவராயிருந்தும் தாம் ஒன்றிலும் உரிமை பாராட்டாது சுடுகாட்டை இருப்பிடமாகக் கொண்டிருக்கிருர். சரீரத்தைப் பிணத்துக்கு நிகராக வைத்து இந்திரியங்களை வென்று கோரதபஸ்வியாக இருக்கின்ருர். சிவனர் போன்று தியாக புத்தியோடு வாழ்ந்து வருகின்றவர்கள்தாம் முன்னேற்றமடைய முடியும். சிவபெருமான் புகட்டுகின்ற பாடத்தை நாம் முறையாக அறிந்து அதன்படி ஒழுகுவோமாக. (தொடரும்)

# ஸ்ரீ லலிதா வியாக்கியானம் - 122

705. ஶாஸ்த்ரமயீ சாஸ்திரமயீ — சாஸ்திரங்கள் அல்லது நூல்களாக வடிவெடுத்திருப்பவள் என்பது இந்த நாமத்தின் கருத்து.

நூல்கள் எண்ணிக்கையில் அடங்கா. வெவ்வேறு மொழிகளில் வெவ்வேறு சமயங்களுக்குரிய கொள்கைகளும் கோட்பாடுகளும் சாஸ்திரங்கள் எனச் சாட்டப்படுகின்றன. இந்தச் சாஸ்திரங்கள் யாவும் சான்றோர்களால் இயற்றப்பெற்று இருக்கின்றன. இவை யாவுக்கும் மேலாக இறைவனால் இயற்றப்பெற்றுள்ள சாஸ்திரம் ஒன்று உளது. அது இயற்கை. இயற்கை இறைவனுடைய மகிமைகளுக்குப் பொருத்தமான விளக்கமாகிறது. ஆதலால் மக்களால் இயற்றப்பெற்றுள்ள சாஸ்திரங்கள் உண்மையா பொய்யா என ஆராய்தற்கு உபாயம் ஒன்று உளது. எந்த நூல்களெல்லாம் இயற்கையின் நடைமுறைக்கு ஒத்திருக்கின்றனவோ அவை யாவும் மெய் நூல்களாகின்றன. இயற்கையின் அமைப்புக்கும் நடைமுறைக்கும் ஒவ்வாதிருக்கும் நூல்களை மெய் நூல்கள் என ஏற்றுக்கொள்ளலாகாது. அறிவை வளர்ப்பதற்கு ஆன்றோர்கள் எழுதி வைத்துள்ள நூல்களும் இயற்கை என்று இயம்பப்படுகிற இறைவனால் தோற்றுவிக்கப்பட்டுள்ள நூலும் நன்கு பயன்படுகின்றன. இயற்கையை முறையாக ஆராய ஆராய அதன் உட்பொருள் விளங்குகிறது. இயற்கையின் உட்பொருளே உண்மையென ஏற்றுக்கொள்ளப்படுகிறது. எனவே எழுதி வைத்துள்ள சாஸ்திரங்களை ஆராய்வதன் வாயிலாகவும், இறைவனால் சிருஷ்டிக்கப்பட்டுள்ள இயற்கையென்னும் சாஸ்திரத்தை ஆராய்வதன் வாயிலாகவும் நாம் அறிவை வளர்க்கிறோம். அறிவை வளர்த்து வருகிற நாம் யுக்தி அல்லது பகுத்தறிவையும் பயன்படுத்தக் கடமைப்பட்டிருக்கிறோம். மக்களால் இயற்றப்பெற்றுள்ள நூல்கள் இயற்கையின் நடைமுறைக்கு ஒத்திருந்தால் அவைகளை ஏற்றுக்கொள்ளுதல் வேண்டும். இயற்கையோடு முரண்படுமானால் முரண்படுகிற பகுதியை ஒதுக்குதல் வேண்டும். இயற்கை என்னும் சாஸ்திரமே பிழைபோகாத சாஸ்திரமாகிறது. ஆதலால் அதுவே முடிந்த பிரமாணமாக அமைகிறது. இயற்கையில் இரண்டு கூறுகள் இருக்கின்றன. அவைகள் முறையே அகம் புறம் எனப் பாகுபடுத்தப்படுகின்றன. மனிதனுடைய மனதின்கண் எழுகின்ற எழுச்சிகள் யாவும் அகம் எனப்பெயர் பெறுகின்றன. புறத்திலே பிரபஞ்சத்தின் அமைப்புக்கள் யாவும் புறம் எனக் கூறப்படுகின்றன. அகம் புறம் ஆகிய இவ் இரு கூறுகளுக்கிடையில் இணக்கம் உளது. அகத்தின் பாங்குக்கேற்ற படியே புறம் பொருள்படுத்தப்படுகிறது. மாசுபடிந்துள்ள மனது புறத்தை ஒருபோக்கில் புலப்படுத்துகிறது. மாசற்ற மனது புறத்தை மற்றொருபோக்கில் புலப்படுத்துகிறது. ஆக அகம் எப்படியோ புறம் அப்படிப் புலப்படுகிறது என்பது ஆன்றோர் அனுபவம். புறத்தை முற்றிலும் செப்பனிட மனிதனுக்கு இயலாது. அகத்தைச் செப்பனிடுவது அவனுக்கு மிக எளிது. அகத்தைச் செப்பனிட அவன் கடமைப்பட்டிருக்கிறான். அகத்தைச் செப்பனிடுவதற்காகவென்று அமைந்துள்ள நூல்கள் யாவும் சாஸ்திரங்கள் எனப் பெயர் பெறுகின்றன. அகத்தைச் செப்பனிடும் செயல் அம்பிகைக்கு மிகப் பிரீதிகரமானது. அச் செயலுக்கு அவள் ஸதா அனுக்ரஹம் செய்துகொண்டிருக்கிறாள். அதை முன்னிட்டு அவள் சாஸ்திரமயீ எனப் போற்றப் பெறுகிறாள்.

அன்னை பராசக்தி சாஸ்திரமயமாக இலங்குகின்றாள் என்று இயம்புவதும் இயற்கைமயமாய் இலங்குகின்றாள் என்று இயம்புவதும் ஒவ்வும். சாஸ்திரத்தை ஆராய்கிறவர்கள் மெய்ப்பொருள் ஆராய்ச்சியாளர்களாக அமையக் கடமைப்பட்டிருக்கின்றனர். எப்பொருள் எத்தன்மைத்தாயினும் அப்பொருள் மெய்ப்பொருள் காண்பது அறிவு என்பது கோட்பாடு. மெய்ப்பொருள் ஆராய்ச்சிக்காரனாயிருப்பவனுக்கு இயற்கைத்தாய் என்றைக்கும் வழிகாட்டியாக அமைந்திருக்கிறாள். அவளுடைய அனுக்ரஹத்தைச் சார்ந்திருந்து சாஸ்திர ஆராய்ச்சி பண்ணுகிறவர்கள் மெய்ஞ்ஞானிகள் ஆகிறார்கள். அதற்கு அன்னை பராசக்தி சாஸ்திரமயீயாக இருந்துஅனுக்ரஹம் பண்ணு

கின்றாள்.

706. गुहाम्बा குஹாம்பா — முருக னுடைய தாயார் என்பது இதனுடைய பொருள்.

குஹா என்னும் சொல் மனிதனுடைய ஹிருதய குஹை என்றும் அல்லது மலை நுழைவு என்றும் பொருள்படுகிறது. குஹையின்கண் வசிப்பவள் என்பது இந்த நாமத்துக்கு அமைந்துள்ள மற்றொரு விளக்கமாகும். மனிதனுடைய உள்ளத்துக்கு ஹிருதய குஹை என்னும் நாமம் அமைந்துள்ளது. ஜீவர்கள் எல்லாருடைய உள்ளங்களிலும் அம்பிகை வீற்றிருக்கிறாள். எனவே அவளைப் போற்றுதற்கு ஆத்ம சாதகன் வேறு எங்கும் தேடி அலைய வேண்டியதவசியமில்லை. உள்ளத்தினுள்ளே அவள் வீற்றிருப்பதை உணர்வது நல்ல வழிபாடு ஆகிறது. 'என் உள்ளம் கவர் கள்வன்' என இறைவனைக் குறித்து ஞான சம்பந்தன் இயம்புகின்றான். ஈண்டு இறைவனும், இறைவியும் ஒன்றே. அன்னையின் இருப்பிடமாகத் தன்னுடைய உள்ளத்தை அறிய வருகிற ஆத்ம சாதகன் பாக்கியவானாகிறான். அதன் விளைவாக தன்னுடைய உடலமைப்பையே அம்பிகையின் ஆலயமாக அவன் உணருகிறான். அவ்வுணர்வினின்று தெய்விக மணத்தும் உருவெடுப்பது திண்ணம்.

மலையில் உள்ள குஹை ஆத்மசாதனத்துக்கு முற்றிலும் பொருத்தமான இடம் ஆகிறது. புறஉலகின் சந்தடி ஏதும் ஆங்கு எட்டுவதில்லை. ஆத்ம சாதகன் தன்னுடைய ஹ்ருதயத்தின் ஓசையையும் ஆங்குக் கேட்கமுடியும். அத்தகைய பொருத்தமான புறவுலகச் சூழ்நிலையில் இருந்துகொண்டு சாதனம் புரிந்தால் சாதகன் விரைவில் முன்னேற்றமடைய முடியும்.

முருகக் கடவுளுக்கு குகன் என்பதும் சுப்ரமணியம் என்பதும் ஏனைய பெயர்களாம். குஹாம்பா என்னும் நாமம் சிறப்பாக வேலவனுடைய தாய் எனப் பொருள்படுகிறது. தாய்க்கும் சேய்க்குமுள்ள இணக்கம் இனிமை வாய்ந்தது. தாயின் துணைகொண்டு சேயை நாம் அறியலாம். அல்லது சேயோடு நெருங்கிய இணக்கம் வைப்பதன் வாயிலாகத் தாயின் அருகில் செல்ல நாம் தகுதியுடையவர்கள் ஆகிறோம். முருகன் என்னும் சொல் குமரன் எனவும், அழகன் எனவும் பொருள்படுகிறது. பிரபஞ்சம் முழுதும் அழகாக வடிவெடுத்திருக்கிறது. தோற்றத்திலுள்ள அழகை ரசிப்பது தெய்வ வழிபாடு ஆகும். அழகை ரசித்து வருவதற்கேற்ப சாதகனுடைய ஞானம் தெளிவடைகிறது. தெளிவடைந்த ஞானம் ஸ்தூல நிலைகளையெல்லாம் தாண்டி அதீதத்திற்குப் போகிறது. குஹனே என்று முருகனைப் போற்றுகின்ற பொழுது அகக்கண்ணுக்கு எட்டுகின்றவனே புறக்கண்ணுக்குப் புலப்படாதவனே எனவும் அது பொருள்படுகிறது. அத்தகைய குஹனுடைய தாயாய் இருப்பவளும் ஸ்தூல நிலையைத் தாண்டி, சூட்சும நிலையில் நிலைத்திருப்பவளாகிறாள். ஆக குஹனுடைய மாதாவை வழுத்துதற்கேற்ப ஆத்ம சாதகன் ஞானத்தின் மகோன்னத நிலையை யெட்டுகிறான். இதுவே இந்த நாமத்தின் உட்கருத்தாம்.

707. गुह्यरूपिणी குஹ்யரூபிணீ—விளங்காத வடிவத்திலிருப்பவள் என்பது இந்த நாமத்தின் பொருள்.

சாதாரண அறிவுக்கு எட்டாததாக எது இருக்கிறதோ அது குஹ்யம் ஆகிறது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். நம்முடைய உடல் வாழ்க்கைக்கு இன்றியமையாததாகப் பூதங்களில் ஒன்றாகிய நீர் இருக்கிறது. இந்த நீர் ஆனது மூன்று நிலைகளில் அமைந்துள்ளது. உறைபனிக்கட்டியாக இருந்த இடத்திலேயே கிடக்கிறது. பெருக்கெடுத்தோடும் திரவ பதார்த்தமாகவும் அது அமைந்திருக்கிறது. கட்புலனாகாத ஆவியாகவும் அது காற்றில் பரந்திருக்கிறது. பின்பு மேகமாக வடிவெடுக்கிறபொழுது அது கட்புலனாகிறது. கட்புலனாவதால் அதைக் கார்மேகம் என்றும், வெண்மேகம் என்றும் இயம்புகின்றோம். கட்புலனாகாதிருக்கிறபொழுது அதனுடைய அமைப்பு குஹ்யமானது. எது நுகர்ச்சிக்கு எட்டுகிறதில்லையோ அது குஹ்யரூபத்திலிருக்கிறது. நீர் ஆனது குஹ்ய ரூபத்திலுமிருக்கிறது, ஸ்பஷ்ட ரூபத்திலுமிருக்கிறது. அம்பாளுக்கு அமைந்துள்ள எண்ணிறந்த ரூபங்களுள் குஹ்ய ரூபம் மிக முக்கியமானது. இதற்கும் சான்று ஒன்று எடுத்துக்கொள்ளலாம். கடலின்மேற்பரப்பு அலை வடிவெடுத்து உருண்டோடுகிறது.

அதுஸ்பஷ்டமாக விளங்குகிறது. ஆனால்கடலின் அடிப்பகுதியோ அசைவற்றிருக்கிறது. அது கட்புலனாவதில்லை. அடிப்பகுதி குஹ்யமாக அமைந்திருக்கிறது. குஹ்யமாக அமைந்திருக்கிற பகுதியே மிக முக்கியமானது. அது அளப்பரியது. அதற்கு நிகராக அம்பாளுடைய சுத்த சைதன்ய சொரூபம். ஞானம் வாய்க்கப் பெறாதவர்களுக்கு அது குஹ்யம். அது அளப்பரியது. தோற்றத்திற்கு வந்துள்ள பகுதி மிகமிகச் சிறியது என்றும் தோற்றத்திற்கு வாராத சுத்த சைதன்ய சொரூபம் அளப்பரியதாகவும் இருக்கிறது. இதுவே குஹ்யரூபிணி என்னும் நாமத்தின் உட்பொருளாம்.

708. **सर्वोपाधिविनिर्मुक्ता** ஸர்வ உபாதி வினிர்முக்தா—உபாதிஎன்னும் சொல்லுக்கு நாம் விளக்கம் காணவேண்டும். ஜலத்தின் மூன்றுநிலைகளைப் பற்றி மேலே சொல்லியுள்ள நாமத்தில் விளக்கம் தரப்பட்டது. ஆவியாக இருக்கிற ஜலம் விளக்க முடியாதது. ஏனென்றால் அதற்கு உபாதி ஒன்றுமில்லை. பிறகு அது உறைபனியாகவும், நீர்ப்பனியாகவும், கெண்டைப்பனியாகவும்,மூடுபனியாகவும் வடிவெடுக்கிறது. இந்த வடிவங்கள் ஒவ்வொன்றும் ஒவ்வோர் உபாதி எனப்படுகிறது. இளகியோடும் நீராகஅமைகின்றபொழுதுஅதுமழைநீர், ஆற்றுநீர், சேற்று நீர், கிணற்று நீர், குளத்து நீர் இப்படியெல்லாம் பல உபாதிகளை எடுக்கிறது. இதேபாங்கில் அன்னை பராசக்தி பிரபஞ்சத்திலுள்ள அனைத்துமாகத் தன்னை தோற்றுவித்துக் கொண்டிருக்கிறாள். பஞ்சபூதங்களாக அவள் இலங்குவது அவளுடைய உபாதிகளாகின்றன. அண்டங்களாக அவள் காட்சி கொடுத்துக் கொண்டிருப்பதும் அவளுடைய உபாதிகளாம். இவை யாவும் அசேதனம் அல்லது ஜடப்பொருள்களாகின்றன. அடுத்தபடியாக அவள் சேதனமாகப் பரிணமிக்கின்றாள். புல் முதல் பிரம்மா பரியந்தம் உள்ள ஜீவகோடிகளனைத்தும் அவளுடைய உபாதிகளாக இடம் பெற்று இருக்கின்றன. உபாதி வேற்றுமையை முன்னிட்டுச் சிற்றுயிர்கள் பேருயிர்களாகப் பரிணமித்து வருகின்றன.

இந்த உபாதிகளனைத்துக்கும் மேலாக மனோவிகாரங்களும் உபாதிகள் எனப்படுகின்றன. மன அமைப்பில் இரண்டு ஜீவர்கள் ஒரேபாங்கில் அமைந்தவர்கள் அல்லர். எத்தனைகோடி ஜீவர்களோ அத்தனைகோடி மனப்பான்மைகள் இருக்கின்றன. ஒவ்வொரு மனப்பான்மையும் ஒவ்வொரு உபாதியாக இலங்குகின்றது. பரிணாமத்தில் மகோன்னத நிலைக்கு வந்துள்ள மானுடன் சில உபாதிகளில் கட்டுண்டவனாகிறான். அவைகளினின்று தன்னை விடுவித்துக்கொள்ள அவனுக்கு இயலுவதில்லை. அந்த உபாதிகள்தனக்கு இருப்பது முற்றிலும் அவசியம்எனவும்அவன் மயக்கம் கொள்கிறான். நான் கற்றவன் என்னும் உபாதி கல்லாதவனோடு சீர்தூக்குதற்கு உதவுகிறது. ஆயினும் அந்த உபாதி அவன் அதீத நிலைக்குச் செல்லுதற்கு இடைஞ்சலாக இருக்கிறது. உயிர் வகைகளுள் வருணபேதம் உண்டு. வருணபேதம் இருப்பது முற்றிலும் அவசியம். ஆனால் வருணம் என்கிற உபாதியும் ஒதுக்குதற்குரியது என்பதைப் பலபேர் அறிந்து கொள்வதில்லை. நான் மேலான வருணத்தைச் சேர்ந்தவன் ஆதலால் கீழான வருணத்திலிருக்கிற ஜீவர்களோடு இணக்கம் கொள்ளேன் என்னும் உபாதி கடப்பதற்கு அரியதாகிறது. இதைக் கடத்தல் கூடாது என்றே பலர் கருதி வருகின்றனர். உபாதியில் பெருநிலைக்கு வந்துள்ள இத்தகையவர்கள் உபாதிக்கு அப்பாற்பட்ட நிலையைக் கிரஹிக்க இயலாதவர்களாக நின்று விடுகின்றனர். இவை யாவுக்கும் மேலாக நான் ஆத்மசாதகன் என்னும் உபாதி மனிதனுக்கு வந்தமைகிறது. இந்த உபாதியில் நல்வாழ்வு துவங்கவேண்டும். ஆனால் அது இந்த உபாதியில் கட்டுண்டு போகலாகாது. கங்கா ஜலம் என்னும் உபாதி மற்ற ஜலங்களுக்கெல்லாம் மேலானதே. ஆனால் உபாதி என்கின்ற முறையில் அது இடைஞ்சலாக அமைகிறது. அங்ஙனம் ஆத்ம சாதகனொருவன் வரவழைத்துக் கொண்டுள்ள மேலான உபாதியையும் கடந்து அவன் உபாதி ரகிதனாகவேண்டும். அப்பொழுதே சுத்த சைதன்யத்தில் லயமாக அவன் தகுதியுடையவனாகிறான். அன்னை பராசக்தி தானே எல்லாவிதமான உபாதிகளினின்றும் விலகியவளாக இருந்துகொண்டு ஆத்ம சாதகர்களைக் கிருபை கூர்ந்து அந்நிலைக்குக் கொண்டுவருகிறாள்.

# ஸத் ஸம்பாஷணை

**கேள்வி: (177) புத்தர் போன்று எல்லாரும் துறவு மேற்கொண்டால் குடும்பத்தின் கதி என்ன?**

மக்கள் எல்லாரும் பணக்காரர் ஆக விரும்புகிறார்கள். ஆனால் எல்லாரும் விரும்பியபடி பணக்காரர் ஆவதில்லை. முறையாகப் பாடுபடுபவர்களுக்கிடையில் ஒரு சிலர்தான் செல்வம் மிகப்படைத்தவர்களாகிறார்கள். அது இயற்கையின் நியதி. மக்கள் எல்லாரும் நல்லவர்கள் ஆக முயல்கிறார்கள். முயன்றாலும் எல்லாரும் நல்வழியில் மேல்நிலையை எட்டுவதில்லை. யாரோ சிலர்க்குத்தான் அது சாத்தியமாகிறது. முற்றிலும் சாத்தியப்படாவிட்டாலும் நல்லவர்களாக முயலுவது முற்றிலும் அவசியம். புத்தர் துறவியாக விரும்பியதுபோன்று மக்கள் எல்லாரும் துறவியர்களாக விரும்புவதில்லை. துறவைப்பற்றிக் கேள்விப்படுகிற பொழுதே அதினின்று விலகிப் பயந்து பின்வாங்குவதே உலகத்தவர் போக்கு. அரிதிலும் அரிதாக ஆயிரத்தில் ஒருவன் துறவறத்தைப் பற்றிக் கேள்விப்படுகிறான். கேள்விப்படுகிற ஆயிரம் மக்களுள் துறவியாக முயலுகிறவன் யாரோ ஒருவன்தான் இருக்கிறான். முயற்சி பண்ணுகிற ஆயிரம் பேர்களில் யாரோ ஒருவன்தான் உலக வாழ்வை முற்றிலும் துறக்க ஆயத்தமாகிறான். உலகத்தின் நிலைமை இப்படி இருக்க எல்லாரும் துறவியர்கள் ஆகிவிட்டால்குடும்பத்தின்கதி என்னவதுஎன்னும் கேள்விக்கு இடமில்லை. துறவுக்குப் பக்குவமாயிருப்பவனைப்பற்றியகோட்பாடு ஒன்றுஉண்டு. உலகத்தவர்கள் எல்லாரும் கூடித் தடுத்தாலும் துறவு மார்க்கத்துக்குத் தகுதி வாய்ந்தவனைத் தடுக்க முடியாது. உலகப்பற்றுஉடையவனை உலகத்தவர்கள் எல்லாரும் ஒன்றுகூடித் துறவறத்தை மேற்கொள் என்று சொல்லி உந்தித் தள்ளினாலும் அவன் உலக வாழ்வினின்று இம்மியளவும் அசையான். மக்களினுடைய போக்கு இப்படியிருக்கப் புத்தர் போன்று எல்லாரும் துறவிகளாகப் போய்விட்டால் குடும்பத்தின் கதி என்ன ஆகும் என்னும் எண்ணத்துக்கே இடமில்லை.

மக்கள் எல்லாரும் உலக வாழ்வில் ஆழ்ந்து பற்று வைத்திருக்கிறார்கள். பற்று வைத்திருப்பது மட்டுமன்று, கணக்கற்ற ஆசைகளுக்கு அவர்கள் அடிமைகளாய் இருக்கிறார்கள். புதிய புதிய ஆசைகளும் அவர்களுடைய உள்ளத்தில் உருவெடுத்துக்கொண்டிருக்கின்றன. ஆசைகளைப் பூர்த்தி பண்ணுவதற்கே மக்கள் திரும்பத் திரும்பப் பிறப்பு எடுத்துக் கொண்டிருக்கின்றனர். பிறவிப் பெருங்கடலில் மேலும் மேலும் மூழ்கிக் கிடப்பதே உலகத்தவர்களுடைய போக்கு.

பிறவிப் பெருங்கடல் நீந்துவர் நீந்தார் இறைவன் அடிசேரா தார் என்பது பொய்யாமொழி. உலக ஆசைகளையெல்லாம் அனுபவித்துப்பார்த்து விட்டு யாருக்கு ஆசையில் நாட்டமில்லையோ அன்னவர்களே பிறவிப் பெருங்கடலை நீந்த முயலுகின்றனர். அப்படி நீந்துகிறவர்கள்தாம் துறவிகள். பிறவிப் பெருங்கடலில் உழன்றுகொண்டேயிருப்பவர்கள் உலகத்தவர்கள். எக்காலத்திலாவது எக்காரணத்தை முன்னிட்டாவது உலகப்பற்று உடையவர்களுடைய எண்ணிக்கை குறைந்துபட்டுப் போகாது. அளப்பரியதாக அது பெருகிக்கொண்டேயிருக்கும். ஆனால் உலகப் பற்றைக் குறைக்கின்றவளவு சமுதாய வாழ்வு நல்வாழ்வு ஆகும். பற்று அதிகரிப்பதற்கேற்பக் கேடுகளும் அதிகரித்துக்கொண்டே போகும். குடும்பத்தின் கதி என்ன ஆகும் என்று சஞ்சலப்படுவதைவிட உலக ஆசைகளைக் குடும்பிகள் குறைத்துக்கொண்டே வந்தால் உலக வாழ்க்கைக்குரிய துன்பங்களும் அதற்கேற்றவாறு குறைவுபடும். ஆதலால் குடும்பிகளாக இருக்கிறவர்கள் துறவறத்தைப்பற்றி எண்ணித் திகிலடைவதற்குப் பதிலாகக் குடும்ப வாழ்க்கையைப் பேராசையற்ற பெருவாழ்வாகத் திருத்தியமைப்பார்களாக.

**கேள்வி: (178) நவராத்திரியின் இறுதி மூன்று நாட்கள் வங்காளத்தில் கொண்டாடப்படும் துர்க்கை பூஜையின் அடிப்படைக் கருத்து யாது?**

நவராத்திரி விழா நம்நாடு முழுதுக்கும் பொதுவாக உள்ள பெருவிழாவாகும். ஒன்பது

நாள் வழிபாடு என இது பொருள்படுகிறது. புரட்டாசி மாதம் அமாவாசையைத்தொடர்ந்து இந்த ஒன்பது நாட்கள் வருகின்றன. ஒன்பது நாட்களில் கடைசி மூன்று நாட்கள் மிக முக்கியமான இடம் பெற்றிருக்கின்றன. இந்த மூன்று நாட்களைச் சரஸ்வதி பூஜை என்றும் ஆயுத பூஜை என்றும் இயம்புவது தென்னாட்டவர்களுடைய ஐதிகமாகும். இதே மூன்று நாட்களைத் துர்க்கை பூஜை என்று பகர்வது வங்காளத்தின் ஐதிகமாகும். அன்னை பராசக்தி ஒன்பது நாட்களில் ஒன்பது வித சக்திகளாக வழுத்தப்படுகிறாள். அத்தகைய வழிபாடு நவசக்தி பூஜை என இயம்பப்பெறுகிறது. நவசக்திகளுள் துர்க்காதேவி என்னும் சக்தி எல்லாவிதமான மகிமைகளும் வாய்க்கப்பெற்றவளாக இருக்கிறாள். அவளுடைய மகிமைகளே பூலோக சம்பத்துக்களாக அமைந்துள்ளன. மகிஷாசுரனை ஸம்ஹாரம் செய்வது அவளுடைய முக்கியமான செயல். ஆதலால் அவள் மகிஷாசுரமர்த்தனி என்னும் நாமம் வாய்க்கப்பெற்றவளாக இருக்கிறாள். எருமையின் வடிவெடுத்துள்ள அரக்கன் என மகிஷாசுரன் என்னும் சொல் பொருள்படுகிறது. அவன் அஞ்ஞானத்தின் சொரூபம். சோம்பலும் துஷ்டத்தனமும் அவனுடைய இயல்புகள். அஞ்ஞானத்தினின்று உருவெடுத்தவன் அவன். அத்தகையவனை ஒழித்தல் வேண்டும். மக்கள் எல்லாரும் சோம்பலையும் தீங்கையும் தகர்த்துத்தள்ளிவிட்டு ஊக்கத்திலும் நல்ல முறையில் உழைப்பிலும் ஈடுபட வேண்டும் என்னும் கோட்பாடு இந்த அரக்கனை அழிப்பதில் அடங்கியிருக்கிறது.

துர்க்காதேவி கைலயங்கிரியினின்று இந்நாட்களில் பூலோகத்திற்கு விஜயம் செய்கிறாள் என்பது ஐதிகம். அப்படி அவள் மண்ணுலகுக்கு வருகிறபொழுது தன்னந்தனியவளாக வருவதில்லை. தன்னுடைய செல்வர்களாகிய கணபதியையும், கார்த்திகேயனையும் தன்னோடு அழைத்து வருகிறாள். நல்லறிவுக்கு உறைவிடம் கணபதி. பேராற்றலுக்கு இருப்பிடம் முருகன். மூத்தவனைப்போன்று அறிவு படைத்தவர்களாகவும் இளையவனைப்போன்று ஆற்றல் படைத்தவர்களாகவும் உலக மக்கள் இருக்கவேண்டும். தன்னுடைய செல்வர்கள் வாயிலாக உலகத்தவர்களுக்கு அன்னை பராசக்தி இக்கோட்பாட்டை எடுத்து வழங்குகின்றாள். மக்கள் எவ்வளவுக்கெவ்வளவு அறிவும் ஆற்றலும் படைத்தவர்களாக இருக்கிறார்களோ அவ்வளவுக்கவ்வளவு அவர்கள் உலக வாழ்வில் முன்னேற்றமடைய முடியும். அம்பிகையின் தோழிமார்களாகிய சரஸ்வதியையும், இலட்சுமியையும், துர்க்காதேவி தன்னோடு அழைத்துக்கொண்டு பூலோகத்திற்கு விஜயம் செய்கிறாள். கலைகளை வளர்ப்பதில் உலக மக்கள் கண்ணும் கருத்துமாயிருக்க வேண்டும் என்னும் கோட்பாட்டைச் சரஸ்வதி தேவியின் வாயிலாக அன்னை உலக மக்களுக்கு எடுத்துப் புகட்டுகிறாள். செல்வத்தை வளர்ப்பதில் மக்கள் பேருக்கம் படைத்திருக்கவேண்டும் என்னும் போதனையைத் திருமகளாகிய லட்சுமிதேவியின் வாயிலாக அன்னை பராசக்தி உலகத்தவர்க்கு நல்லறிவு புகட்டுகிறாள். பிறகு தானே பலப்பல ஆயுதங்களை உடைத்திருப்பதன் வாயிலாக உலக வாழ்வைப் பெருவாழ்வாகப் பெருக்குவது வாழ்க்கையின் நோக்கம் என்பதை அம்பிகை அறிவுறுத்துகிறாள்.

**கேள்வி: (179) பிரணவ மந்த்ரம் என்றால் என்ன?**

எது இயங்குகிறதோ அது ஓசையை உண்டு பண்ணுகிறது. பிரபஞ்சம் முழுதும் ஸதா இயங்கிக் கொண்டிருக்கிறது. இயங்குவதால் அதற்கு இயற்கை என்னும் பெயர் வந்துள்ளது. ஜகத் என்பது அதற்கு அமைந்துள்ள மற்றொரு பெயர். கச் என்னும் அடிச்சொல்லினின்று ஜகத் என்னும் சொல் வந்துள்ளது. நிலை மாறிப் போய்க்கொண்டிருப்பது என்பது அதன் பொருள். நிலை மாறுவதால் ஓசை உருவெடுக்கிறது. இயற்கை முழுதும் அசைவதினின்று வடிவெடுத்துள்ள ஓசைகளின் தொகை பிரணவம் என்றும் ஓங்காரம் என்றும் இயம்பப் பெறுகிறது. மற்ற ஓசைகளுக்கெல்லாம் இதுவே பிறப்பிடம். ஆதலால் இது பீஜ மந்த்ரம் எனப் போற்றப்படுகிறது. பிரணவத்தைச் சார்ந்தே அந்தந்த தெய்வங்களுக்குரிய மந்த்ரங்களாகிய பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் ஆகிய மந்த்ரங்கள் அமைந்துள்ளன. ஆதலால் பிரணவத்தை உபாசிப்பது சிறந்த வழிபாடு ஆகிறது.

# பெண்ணின் பெருமை

(சுவாமி ஸதானந்தர்)

[360ஆம் பக்கத் தொடர்ச்சி]

சரித்திரத்திலிருந்து ஒரு நம்பிக்கை ஒளி வீசுகிறது. ஔரங்கசீப் போன்ற வெறியர்களின் ஆட்சிக் காலத்திலும்கூடத் தனி மனிதன் செய்த நன் முயற்சி சமுதாயத்தில் ஊடுருவி நன்மை விளைவித்திருக்கிறது. அதன் பயனாக அன்றோ இன்றும் நாம் அழிந்து போகாமல் இருக்கிறோம். ஆகையால் மனம் தளர வேண்டியதில்லை.

தருமத்தின் வாழ்வதனைச் சூதுகவ்வும்
தருமம் மறுபடி வெல்லும் எனும் இயற்கை
மருமத்தை நம்மாலே உலகம் கற்கும்......
இன்று கட்டுண்டோம், பொறுத்திருப்போம், காலம்மாறும்
தருமத்தை அப்போது வெல்லக் காண்போம்

என்கிற பாரதியாரின் வீரகாவியம் நம்பிக்கை ஊட்டுகிறது. 'என்ன கொடுமையிது' என்று பார்த்திருந்தார்.

ஊரவர் தம் கீழ்மை உரைக்கும் தரமாமோ ?
வீரமிலா நாய்கள், விலங்காம் இளவரசன்
தன்னை மிதித்துத் தராதலத்திற் போக்கியே,
பொன்னையவள் அந்தப் புரத்தினிலே சேர்க்காமல்
நெட்டை மரங்களென நின்று புலம்பினர்.

* * * *

சால நன்கு கூறினீர் ஐயா தருமநெறி
பண்டோர் ராவணனும் சீதை தன்னைப் பாதகத்தால்
கொண்டு ஓர் வனத்திடையே வைத்துப்பின் கூட்டமுற
மந்திரிகள் சாத்திரிமார் தம்மை வரவழைத்தே
செந்திருவைப் பற்றிவந்த செய்தி யுரைத்திடுங்கால்
'தக்கதுநீர் செய்தீர் தருமத்துக் கிச்செய்கை
ஒக்கும்' என்று கூறி உகந்தனராம் சாத்திரிமார்
பேய் அரசு செய்தால் பிணந்தின்னும் சாஸ்திரங்கள்

* * * *

'பெண்டிர் தமையுடையீர் பெண்களுடன் பிறந்தீர்
பெண்பாவமன்றோ? பெரிய வசை கொள்ளீரோ?
கண்பார்க்க வேண்டும்' என்று கையெடுத்துக் கும்பிட்டாள்.

* * * *

கிட்டத்தட்ட இச்செயல் இன்று அப்படியே நடக்கிறது. சினிமா, பத்திரிகைகள், விளம்பரங்கள் ஆகிய யாவும் கீழ்த்தரமானவையாக இருந்து வருகின்றன. கீழான உடை அலங்காரம்,முடிஅலங்காரம் இவைகளைச்சமூகத்தில் பரப்பி வருகின்றன. இவைகள் திருந்தி அமைந்தால் பல தீமைகள் தாமே போய்விடும். மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை ஆகிய மூன்றையும் விட்டாலன்றி மனிதன் சன்மார்க்கத்திற்குள் புகமுடியாது. ஸ்ரீ ராமகிருஷ்ணர் இதையே காமகாஞ்சனத்தியாகம் என்றுபகர்ந்தார். பணம்சம்பாதிப்பதற்காக எவ்வளவு இழிவாக வேண்டுமானாலும் நடக்கலாம் என்று ஆகிவிட்டது. காமமும் காசு ஆசையும் மனிதனைப் படாதபாடுபடுத்தி வருகின்றன. அவைகள் அவனுக்குக் கீழ்த்தரமானவைகளாகவே படவில்லை. சன்மார்க்கம், ஒழுக்க நெறி, நீதி நெறி மக்களிடையே நன்கு வேரூன்ற வேண்டும். அவர்கள் அவற்றிற்கு மதிப்பு, முக்கியத்துவம் கொடுத்தாலன்றி விமோசனம் இல்லை. பக்தியில் மனதைக் கடவுள்பால் திருப்பினால் இவைகளோடு இன்னும் பலநன்மைகளும் கைகூடும். சீலமும், பாரமார்த்திகமும்நம்சமூகத்தின் உயிர் நாடி. அவற்றை விட்டால் புறக்கணித்தால் நாம் அழிந்துவிடுவோம். பதவியில் உள்ள நல்லவர்கள் இவற்றையெல்லாம் உணர்வார்களாக. அவர்கள் அவற்றிற்காக முயல்வார்களாக. பணம் சம்பாதிப்பது, சுகபோகத்துடன் வாழ்வதுமட்டும் நம்லக்ஷியமல்ல. மனிதனாகப்பிறந்ததற்கு இது ஏற்றதும் அன்று. சந்தனக்கட்டையை விறகாக எரித்தாற்போல மானுட ஜீவிதம் அற்பமானதாகப் போய்விடலாகாது. அது தெய்வ நிலையை அடைவதற்கென்றே படைக்கப்பட்டிருக்கிறது. பண்பாடான,அன்பு நிறைந்த, சீலமான, ஞானவாழ்வு, சன்மார்க்க வாழ்வு வாழவேண்டும் என்கிற திருப்பம் பொதுமக்களிடையே வரவேண்டும். பெண்கள்

விஷயத்தில் நாம் கடைப்பிடிக்கும் கொள்கைகள் நமது பண்பாட்டை விளக்குகின்றன. வணக்கத்துக்குரியவள், பெருமைக்குரியவள் பெண். அஷ்டலக்ஷ்மிகளும் அவளே. நமக்குக் கல்வியையும் செல்வத்தையும் வழங்க வேண்டியவள் அவளே. நமக்கு ஆரோக்கியத்தையும், நல்ல மனதையும், நல்ல உடலையும் உருவாக்கித்தரவேண்டியவள் அவளே.

'தாயைப்போலப் பிள்ளை; நூலைப்போலச் சேலை' என்பது பழமொழி. மக்களை உருவாக்குபவள் தாயாகின்றாள். தாய் எவ்வளவு சிறப்புடையவளாக இருக்கின்றாளோ அவ்வளவு சிறப்புடையவர்களாக மக்கள் உருவாகுவார்கள். குழந்தை கருவிலிருக்கும் போதே தாய் என்னுகின்ற எண்ணம் குழந்தைக்குப் பயன்படுகிறது. குழந்தை பிறந்தும் முதலாவதாகத் தாயைத்தான் அறிகிறது. தாய் புகட்டுவதும், தாய் நடந்துகொள்வதும் குழந்தையின் உள்ளத்தில் பசுமரத்தாணி போல் பதிந்துவிடுகின்றன. சுவாமி விவேகானந்தர், 'தாம் அடைந்துள்ள மேன்மைகள் அனைத்துக்கும் தம் தாய் புவனேசுவரி மாதா தான் காரணமாவாள்' என்று பகர்ந்துள்ளார். சீதை தன் குழந்தைகளாகிய குசன், லவன் இருவருக்கும் தந்த பண்பும், பயிற்சியும் அவர்களை இராமனைக்காட்டிலும் மேலானவர்களாக்கிவிட்டன. சமுதாயத்தில் பெண்பாலர்கள் கல்வியும், பண்பும் பெறுவது அவசியமாகிறது. அவர்கள் பண்பாட்டிலும் கல்வியிலும் எந்த அளவு மேலோங்குகிறார்களோ அந்த அளவுக்குச்சமுதாயம் மேலானதாகிறது. பெண்பாலர்களைக் கௌரவிக்காது எந்தச் சமுதாயம் அவர்களை இழிவுபடுத்துகிறதோ, அந்தச் சமுதாயம் கீழ்நிலை அடைவது திண்ணம். பெண்பாலர்களைச் சக்தி சொரூபங்களாகக் கருதிப் போற்றும் சமுதாயம் மேன்மையடைவது திண்ணம்.

பெண்மணியே, தாயே, தேவியே நீ உயர்ந்ததொரு காரியத்துக்காகப் படைக்கப்பட்டிருக்கிறாய். இன்றைய சமூகத்தில் நிலவிவரும் பல தீமைகளை நீ மனம் வைத்தால் திருத்திவிடலாம். குழந்தைகளை நல்ல முறையில் வளர்ப்பாயாக. பக்தி, ஞானம், வீரம், கற்பு நிறைந்த சந்ததியைக் கொடுப்பாயாக. கற்பு என்னும் உயர்ந்த நிலையில், தெய்வ நிலையில் என்றும் நீ நிலைத்திருப்பாயாக. கன்னியாகுமரியில் குமாரியாக இருந்து தபஸ் செய்கிறாய். தெய்வப் பெண்ணாகி மீனாக்ஷி சுந்தரேசுவரன் ஆகிறாய். பிறகு அன்னபூரணியாக இருந்து ஞான வைராக்கியம் நல்குகிறாய். முடிவில் பரசிவத்திடம் உன் மைந்தர்களை ஒப்படைத்துவிட்டு நீ சதாசிவத்தில் ஒடுங்கிவிடுகிறாய். தவப் புதல்வர்களை ஸ்ரீ ராமச்சந்திரப் பிரபுவிடம் ஒப்படைத்துவிட்டு நீ பிரகிருதியில் லயமாய் விடுகிறாய். இந்தப் பெரிய பொறுப்பை நீ முறையாக ஆற்றுவாயாக. நாம் வாழ்வது பூமாதேவியின் மடியில். நம்மைத் தாலாட்டி வளர்த்தவள் பாரதமாதா. உலக விவகாரத்துக்கு, பேசுவதற்கு உதவியவள் தமிழ்த்தாய். வணங்கத்தக்க, தெய்வநிலையில் தியாகமூர்த்தியாய் இருக்கிறாள் பெற்ற தாய். பாரதத் தாயின் புதல்விகளே உங்கள் முன்னோர்கள் சீதை, சாவித்திரி, அனுசூயா, நளாயினி, கண்ணகி போன்றவர்களின் உயர்நிலைக்கு உங்களை உயர்த்திக்கொள்வீர்களாக. அப்பொழுது இவ்வுலக மெல்லாம் நன்மையடையும். வாழ்வதும் பெண்ணாலே, மாய்வதும் பெண்ணாலே என்பார்கள். தாயே, நீ இவ்வுலகை வாழவைப்பாயாக. அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம், ஒருவனைப்பற்றி ஓரகத்திரு, கற்பெனப்படுவது சொல் திறம்பாமை, காவல் தானே பாவையர்க்கழகு, தாயிற் சிறந்த தொரு கோயிலுமில்லை, துடியாப் பெண்டிர் மடியில் நெருப்பு, தூற்றும் பெண்டிர் கூற்றெனத் தகும், பேதமை என்பது மாதர்க்கு அணிகலம், தந்தை தாய்ப் பேண், மோகத்தை முனி. இந்த ஆத்திசூடி, கொன்றைவேந்தன் வரிகளில் தாய் வணக்கம், தீய மனதுக்கு எச்சரிக்கை, நல்ல மக்கள் எப்படி நடந்துகொள்ள வேண்டும் என்பதற்கு வழிகாட்டுதல் எல்லாம் அமைந்துள்ளன. இம்முறையில் நம் சமுதாயம் திருந்தி அமையுமாயின் எல்லா நன்மைகளும் அடையும். பெண்களெல்லாம் பராசக்தி சொரூபம் ஆகிறார்கள். ஸ்ரீ ராமகிருஷ்ணர் பெண்களையெல்லாம் பராசக்தி சொருபமாகக் கருதி வழிபட்டார். பெண்களைப் பராசக்தி சொருபங்களாகக் கருதி வழிபடும்பொழுது தான் நம்நாடு பெருமையடையும். (முற்றும்)

# அனுமன் -3

( சுவாமி ஆத்மானந்தர் )

ராமனின் அழகு

இயற்கை அழகு மயமானது. இயற்கை அழகினை மனிதன் ரசிக்கிறான். இயற்கை அழகினை மனிதனைப்போன்று ரசிக்க மற்ற வுயிர்களுக்கு இயலாது. உயிர்கள் அனைத் திடத்தும் அழகு குடிகொண்டுள்ளது. ஒவ் வொரு உயிரும் அதனதன் அமைப்பில் அழகு மயமாகவே திகழுகின்றது. காந்தம் இரும் பைக் கவர்ந்திழுப்பது போன்று அழகு நம் உள்ளத்தைக் கவர்ந்திழுக்கின்றது. மாந்தர் அனைவருடைய உள்ளத்தையும் கவர்ந்திழுக் கும் வல்லமை பேரழகுக்குண்டு. உயிர்கள் அனைத்தையும் தன்பால் கவர்ந்திழுக்க வல்லது எதுவோ அது தெய்வீக அழகு வாய்ந்ததாகத் திகழுகின்றது. ஆனால் உயிர்கள் அனைத் திடத்தும் தெய்வீக அழகின் பரிபூரணத் தன்மையை நாம் காணமுடியாது. தெய்வீக அழகின் ஒரு சிறு பகுதிதான் உயிர்களிடத் துள்ள அழகாகக் காட்சியளிக்கின்றது.

यद्यद्विभूतिमत्सत्त्वं श्रीमदूर्जितमेव वा ।
तत्तदेवावगच्छत्वं मम तेजोंशसंभवम् ॥

யத்யத்விபூதிமத்ஸத்வம் ஶ்ரீமதூர்ஜிதமேவ வா
தத்ததேவாவகச்சத்வம் மம தேஜோம்சஸம்பவம்

"மஹிமையும் அழகும் வலிவும் உடையது எது எதுவோ அதெல்லாம் என் பிரபையின் ஒரு பகுதியில் உண்டானது என்று அறிக" என் பது கண்ணபிரான் கூற்று. திருமாலின் அவ தாரமாகிய கண்ணன் அழகுத் தெய்வமாகத் திகழுகின்றான். உயிர்கள் அனைத்தும் கண் ணன் கட்டழகினால் கவர்ந்திழுக்கப்படுகின்றன. திருமாலின் மற்றொரு அவதாரமூர்த்தியாகிய ராமபிரானும் அழகின் உறைவிடமாய்த் திகழு கின்றான். ராமன் தெய்வீக அழகு வாய்க்கப் பெற்றவன். ராமனின் ஒப்பிலா அழகினைக் கம்பன் பல இடங்களில் படம் பிடித்துக் காட்டுகிறான். ராமன் அழகு ஓவியத்தில் எழுதவொண்ணாததாய், காவியத்தில் மட்டும் எழுதவல்லதாய் இருக்கின்றது. ராமகாவியத் தில் இருக்கின்ற ராமன் வடிவழகினை ராமன் ஓவியத்தில் நாம் காண்கிறோமில்லை.

மானுட அழகு அழிந்துபோகக் கூடியது. ஆனால் தெய்வீக அழகோ அழியாத்தன்மை வாய்ந்தது. வயதின் முதிர்வு தெய்விக வடி வழகின் மாட்சிமையை எந்த விதத்திலும் பாதிப்பதில்லை. ராமன் தெய்வத்தன்மை வாய்ந் தவன். அவனிடத்துள்ள குணச் சிறப்போ செப்பருந்தன்மையது. மனித வர்க்கத்துள் நரோத்தமன் என்று சான்றோரால் போற்றிப் புகழப்பட்டவன் ராமன். தெய்வீக வடிவழகு வாய்க்கப் பெற்றவன். அவன் வடிவழகு மானுடரால் முற்றும் முடியக்காணப்பெறாதது என்பதையும்; ஏனைய மாந்தருடைய அழகினைப் போன்று அழியுந்தன்மை உடையதன்றி அழி யாத்தன்மையது என்பதையும் கம்பன் இரு பாடல்களில் வைத்துக் காட்டுகிறான். அப் பாடல்களாவன:

"தோள் கண்டார், தோளே கண்டார்;
தொடு கழல் கமலம் அன்ன
தாள் கண்டார், தாளே கண்டார்;
தடக்கை கண்டாரும், அஃதே;
வாள்கொண்ட கண்ணார் யாரே,
வடிவினை முடியக் கண்டார்?
ஊழ்கொண்ட சமயத்து அன்னான்
உருவு கண்டாரை ஒத்தார்"

"வெய்யோன் ஒளி தன் மேனியின்
விரி சோதியின் மறைய
பொய்யோ எனும் இடையாளொடும்,
இளையானொடும், போனான்
மையோ, மரகதமோ, மறிகடலோ,
மழை முகிலோ,
ஐயோ, இவன் வடிவு என்பதோர்
அழியா அழகு உடையான்."

ராமன் அழகின் உச்சநிலையினைக் கிஷ்கிந்தா காண்டத்திலும் காண்கின்றோம். ராமலக்கு வரைக் காணச் சுக்ரீவனை அனுமன் அழைத்து வருகிறான். ராமலக்குவர் ஒருகுன்றின்மீது உட் கார்ந்திருக்கின்றனர். எட்டவரும்போதே சுக்ரீ வன் கண்கள் அவர்களைக் கண்டுவிடுகின்றன. அவ் இருவருடைய வடிவழகு அவன் உள்ளத் தைக் கொள்ளைகொண்டுவிடுகின்றது. அவர் களுடைய அழகினில் ஈடுபட்டுப் பரவசனாய் அப்படியே நெடுநேரம் அசையாது நின்றுவிடு

கிருன். பிரமன் படைத்த உலகங்களெல்லாம், படைப்புக் காலந்தொட்டு இதுகாறும் செய்த புண்ணியங்களனைத்தும் ஒருங்கு குவிந்து இரு வடிவங்களாகி ராமலக்குவராய் உருவெடுத்து வந்திருக்கின்றனவோ என்று கருதுகிருன்.

"நோக்கினுன் நெடிதுநின்ருன் நொடிவு அருங்
கமலத்து அண்ணல்
ஆக்கிய உலகம் எல்லாம், அன்று தொட்டு
இன்றுகாறும்,
பாக்கியம் புரிந்த எல்லாம் குவிந்து, இரு
படிவம் ஆகி
மேக்கு உயர் தடந் தோள் பெற்று, வீரர்
ஆய் விளைந்த வென்பான்."

"முன்பு தேவர்களுக்கெல்லாம் தேவர்களாக இருந்தவர்கள்தாம் தேவலோகத்தை விட்டு இப்பிறப்பில் மானுட வடிவெடுத்து வந்திருக்கின்றனர் போலும்! சிவன் அயன் என்று சொல்லப்படுகின்ற தெய்வக்கூட்டங்கள் எல்லாரையும் மனிதவர்க்கம் வென்றுவிட்டது" என்கிருன். இதனைக் கம்பன்:

தேறினன் அமரர்க்கு எல்லாம் தேவர் ஆம்
தேவர் அன்றே,
மாறி, இப் பிறப்பில் வந்தார் மானிடர் ஆகி
மன்னே
ஆறுகொள் சடிலத்தானும், அயனும், என்று
இவர்கள் ஆதி
வேறு உள குழுவை எல்லாம், மானுடம்
வென்றதென்றே"

என்ற பாடலில் விளக்குகிருன். பரமன் சிருஷ்டியில் மானுடன் மிக மிக உயர்ந்தவன். அழகிலும் மானுட அழகுக்கு ஈடு இணையே கிடையாது. அழகும் அறிவும் ஆற்றலும் ஒருங்கே அமையப்பெற்றவன் ராமன். புற அழகுடன் வீரமும் தியாகமும் தவமும் சேர்ந்து பொலிகின்றன ராமனிடத்து. அதனுல் அவன் அழகு மண்ணுலக விண்ணுலக சிருஷ்டி யனைத்திலும் மேம்பட்டு விஞ்சி நிற்கின்றது.

**ராம சுக்ரீவர் நட்பு**

ராம லக்குவருடைய கட்டழகினைக் கண் குளிரக் கண்டுகளித்த சுக்ரீவன் உள்ளத்து அன்பு வெள்ளம் பெருக்கெடுத்தோட அவர்களருகில் வருகின்ருன். அவனைக் கண்ணுற்ற கமலக்கண்ணனுகிய ராமன் தன் புனைமலர்த் தடக்கை நீட்டி அருகில் இருக்கும்படி காட்டுகிருன். சுக்ரீவன் ராமனை நோக்கி; "உன்னை அடையப்பெற்ற என்னைக்காட்டிலும் புண்ணியம் செய்தோர் எவருமிலர். என் நல்வினைப் பயனே சர்வலோக நாயகனுகிய உன்னை வந்தடையும்படி செய்திருக்கிறது. விதியே முன்னின்று உதவும்போது இவ்வுலகில் பெறுதற்கரியது என்ன இருக்கிறது!" என்றெல்லாம் நெஞ்சார நினைந்து வாயார வாழ்த்திப் புகழ்கின்ருன். அதற்கு மறுமொழியாக ராமன்: "நீ இங்கிருப்பதைச் சபரி என்னும் அருந்தவ முதாட்டி சொல்லக் கேட்டறிந்தோம். உன் துணையினுல் எங்கள் துயரம் தீருமென்றெண்ணி இங்கு வந்தோம்" என்கிருன். அதற்கு மறுமொழியாகச் சுக்ரீவன்: "என் தமையன் வாலி என்னைக் கொல்லுதற்கு ஓங்கிய கையினனுய் வந்தபொழுது, நான் பயந்து உலகனைத்தும் ஓடியும் விடாது துரத்தினுன். இவ்விடத்திற்கு வந்தால் அவன் நாசமடைவான் என்ற முனிவர் சாபம் உளதாதலால் இங்கு வந்து உயிர்தப்பிப் பிழைத்தேன். உன்னை நான் சரண் அடைகிறேன். என்னை நீ காத்தருள்வாயாக" என்று வேண்டுகிருன். ராமன் சுக்ரீவனைக் கருணையோடு நோக்கி அபயம் அளித்து அவனைத் தன் இன்னுயிர்த் துணைவனுகவும் ஏற்றுக்கொள்ளுகிருன். பின்னர் சுக்ரீவன், ராம லக்குவர்க்கு விருந்தளிக்க விரும்பித் தன் இருப்பிடம் அழைத்துச் செல்லுகிருன். விருந்துண்ட ராமன், சுக்ரீவன் துணைவியின்றித்தன்னை உபசரித்ததைஅறிந்து, "நீயும் உன் துணைவியைப் பிரிந்தனையோ?" என்று கருணையும் இரக்கமும் தோன்ற வினவுகிருன். அதற்குப் பதில்கூறுமுகத்தான் அனுமன் எழுந்து: "வாலியின் பேராற்றலையும், அவனுடைய பல பராக்கிரமச் செயல்களையும், வாலி சுக்ரீவர்க்கிடையில் ஏற்பட்ட பகைமையின் விருத்தாந்தத்தையும், வாலியினுல் சுக்ரீவன் எவ்வாறெல்லாம் துன்புறுத்தப்பட்டான் என்பதையும், சுக்ரீவன் உரிமை மனைவி 'ருமையை' வாலி அபகரித்துக்கொண்டதனையும் விவரமாக எடுத்துக் கூறுகிருன். சொல்லின் செல்வனும் அனுமன் உரையினைக் கேட்ட ராமன் கடுஞ்சினங் கொள்கிருன். தாயுரைகேட்டுத் தரணியைத் தம்பிக்கீந்த தயாமூர்த்தியாகிய ராமன், தம்பியின் மனை

வியை வாலி அபகரித்தான் என்ற வார்த்தையைக் கேட்டதும் வெஞ்சினம் கொள்கிறான். சுக்ரீவனை நோக்கி : "உன் அண்ணன் வாலியினைக் கொன்று உன் மனைவியை இராஜ்யத்தோடும் உன்னிடம் ஒப்படைக்கின்றேன் ; அவனைக் கொல்ல அவன் உறைவிடம் காட்டு" என்கிறான். ராமபிரானது உரையினைச் செவிமடுத்த சுக்ரீவன் இதுகாறும் அழுந்திக்கிடந்த துன்பக் கடலினின்றும் கரையேறி பேரானந்த வாரிதியில் மூழ்கித் திளைக்கின்றான். சுக்ரீவனும் ராமனை நோக்கி : "தானும் சீதையைத் தேடி, அவள் இருக்குமிடத்தைக் கண்டுபிடித்து அவளை ராமனிடம் சேர்ப்பிப்பதாய் உறுதி கூறுகிறான். இங்ஙனம் இருவர்க்குமிடையில் இணைபிரியா நட்பு ஏற்பட்டது.

வாலி மோக்ஷம்

எல்லாரும் ஒருங்கு கூடி வாலியிருக்குமிடத்தை அடைகின்றனர். சுக்ரீவன் வாலியை வலியப் போருக்கழைக்கின்றான். இடியிடித்தாற் போன்று தொடைதட்டி ஆரவாரம் செய்து ஆர்ப்பரிக்கின்றான். சுக்ரீவன் போர் முழக்கம் கேட்டுக் குகையினுள்ளிருந்து வெளிவரும் சிங்கமெனப் பாய்ந்து வருகிறான் வாலி. அவன் அருமை மனைவி தாரை தடுத்து நிறுத்தியும் கேளாது புறப்பட்டு வருகிறான். இருவரும் ஒருவரோடொருவர் பொருதனர். அவர்கள்போரிட்ட காட்சி யானையோடு யானையும், யாளியோடு யாளியும் பொருவது போன்றிருந்ததாம். வாலியினால் தாக்குண்டு தோல்வியுறும் தறுவாயில் சுக்ரீவன் ராமன் மறைந்திருக்குமிடத்தினை நோக்குகிறான். ராமன் உடனே அம்பெய்து வாலியை வேரற்ற மரம்போல் தரையில் வீழ்த்தி விடுகின்றான். ராமபாணம் வாலியின் மார்பில் வாழைப்பழத்தில் ஊசி நுழைதல் போல் எளிதாக நுழைந்ததாம். ராமபாணத்தின் வல்லமை இருந்தவாறு என்னே !

ராமபாணம்பட்டுத் தரையினில் வீழ்ந்த வாலி முதலில் வாயில் வந்தவாறெல்லாம் ராமனை ஏசி இகழ்ந்து பேசுகிறான். ஆனால் இறுதியில் விவேகம் உதயமாகி ஞானம் வந்த பின்னர், தன் தவறுதலை உணர்ந்து ராமன் செய்தது சரி என்று ஏற்றுக்கொள்ளுகிறான். தன் தீவினையினால்தான் தனக்கு இத்தகைய தண்டனை கிடைத்தது என்கிறான். ராமன் திருமாலின் அவதாரம் என்பதனை உணர்ந்து, தான் செய்தகுற்றங்களைப் பொறுத்தருளும்படி வேண்டுகிறான். ராமனைமூவர் நீ! முதல்வன் நீ! முற்றும் நீ ! மற்றும் நீ ! தருமம் நீ ! பாவம் நீ! பகையும் நீ! உறவும் நீ என்று போற்றித் துதிக்கின்றான். ராமனைநோக்கி: "பெருமானே! நீ எனக்கு நல்கிய ஞான திருஷ்டியினால் நீ யார் என்பதையும்; உன் தன்மை யாது என்பதனையும் அறிந்து கொண்டேன். அங்ஙனம் அறிந்ததனால் அரியவற்றுள் அரிதான முக்தியை எளியவற்றுள் எளிதாக எய்தப்பெற்றேன்' என்கிறான். 'என்னைக் கொல்ல உன்னைக் கொணர்ந்த என் தம்பி, அநித்தியமான வெற்றரசைத் தான் வைத்துக்கொண்டு, நித்தியமான வீட்டரசை எனக்கு அளித்துள்ளான். அவன் செய்த உதவிக்கு ஈடு இணையே கிடையாது " என்கிறான். இதனைக் கம்பன் :

மற்று இனி உதவி உண்டோ
வானினும் உயர்ந்த மானக்
கொற்றவ! நின்னை, என்னைக்
கொல்லிய கொணர்ந்து, தொல்லைச்
சிற்றினக் குரக்கினோடும் தெரிவு
உறச் செய்த செய்கை,
வெற்று அரசு எய்தி, எம்பி,
வீட்டு அரசு எனக்கு விட்டான் "

என்ற பாடலில் படம் பிடித்துக் காட்டுகிறான். பின்னர் வாலிதம்பி சுக்ரீவனையும் மைந்தன் அங்கதனையும் ராமனிடம் ஒப்படைக்கிறான். தான் மகிழ்ச்சியோடு உயிரை விடுவதாகவும் ஆனால் ஒரே ஒரு மனக்குறைதான் உண்டு என்றான். சீதையைக் கவர்ந்து சென்ற வஞ்சக இராவணனை என் வாலினால் பற்றிக்கொணர்ந்து பாதகாணிக்கையாக உன் திரு முன்னர் வைக்கும் பேறுபெற்றிலேன். ஆனால் அக்காரியத்தைச் செய்துமுடிக்க இதோ அனுமன் இருக்கிறான். அனுமன் எக்காரியத்தையும் எளிதே செய்துமுடிக்கவல்லவன். அவன் உன் கை வில் போன்று உற்றுழிஎல்லாம் உதவுவான் என்று கூறுகிறான். பின்னர் தம்பி சுக்ரீவனையும், மைந்தன் அங்கதனையும் அருகில் அழைத்து அறவுரைகள் பல கூறி அவ்விருவரையும் ராமன் பால் ஒப்படைத்துவிட்டு அமைதியாக ஆவி துறக்கின்றான்.

# தெய்வீக இயல்புகள்

மனிதன் பிறக்கும்பொழுது வித்யாகுணம், அவித்யாகுணம் என்னும் இருகுணங்களுடன் பிறக்கின்றான். வித்யாகுணம் தெய்வீக இயல்பையும், அவித்யாகுணம் அசுர இயல்பையும் வளர்க்கின்றன. வித்யா குணத்தை வளர்ப்பவன் தெய்வத்தன்மையை அடைகின்றான். அவித்யாகுணத்தை வளர்ப்பவன் அசுரத் தன்மையை அடைகின்றான். மனிதனை இயக்கும் சக்திகளுள் எண்ணம் முக்கிய இடம் பெறுகிறது. எண்ணம் மனிதனை இயக்கும் ஒரு நுண்ணிய சக்தியாகும். 'எண்ணம் போல வாழ்வு' என்பது கோட்பாடு. எண்ணமே வாழ்வாகப் பரிணமிக்கின்றது. ஆலம் விதையினுள் ஆல விருக்ஷம் சூட்சும நிலையில் இருக்கிறது. ஆலம் விதையினுள் இருக்கும் சூட்சும விருக்ஷம்போன்றது எண்ணம். தோற்றத்திலிருக்கும் விருக்ஷம் போன்றது வாழ்வு. மனிதன் தன் வாழ்வின் மூலம் விளக்குகின்ற மகிமைகள்யாவும் சூட்சுமமாகிய எண்ணத்திலிருந்து வந்தவையாகும். வாழ்வைத் திருத்தி அமைப்பதற்கு எண்ணத்தைத் திருத்தி அமைத்தாகவேண்டும். வாழ்வில் எண்ணம் முக்கிய இடம் பெறுவதால் எத்தகைய எண்ணத்தை எண்ணவேண்டும் என்பதில் மனிதன் கருத்துச் செலுத்தியாக வேண்டும்.

உடலை உணவு வளர்க்கின்றது. உடலைப் பொறுத்தவரையில் உணவு விஷயத்தில் மனிதன் கருத்துச் செலுத்தவேண்டும். உடலுக்கு ஆரோக்கியத்தையும், வளர்ச்சியையும் தரக்கூடிய உணவுப் பொருள்களை மனிதன் ஏற்கவேண்டும். உடலையே அழிக்கும் விஷஉணவை மனிதன் ஒழிக்கவேண்டும். அஃதேபோன்று உள்ளத்தை வளர்க்கும் சீரிய கருத்துக்களை ஏற்கவும், உள்ளத்தைப் பாழ்படுத்தும் அற்ப விஷயங்களை ஒதுக்கவும் மனிதன் கற்றுக்கொள்ளவேண்டும். உள்ளத்தை வளர்க்கும் எண்ணங்கள் எத்தகையவை என்பதை நாம் சிந்தித்துப் பார்க்கவேண்டும். உலகப்பொருள்கள் உள்ளத்தில் எண்ணத்தைத் தூண்டுவதற்கு முகாமைகளாகவிருக்கின்றன. உலகப் பொருள்களோடு அகக்கருவிகள், புறக்கருவிகள் ஆகிய இவைகளைக்கொண்டு நாம் தொடர்பு வைக்கின்றோம். அப்படி நாம் தொடர்புகொள்ளும்பொழுது அப்பொருள்கள் நம் உள்ளத்தில் எண்ணத்தைத் தோற்றுவிக்கின்றன. அப்பொழுது உள்ளத்தில் தோன்றும் எண்ணங்கள் எத்தகையனவாக இருக்கும் என்பது நம் வாழ்வைப் பொறுத்திருக்கிறது. எத்தகைய வாழ்வு வாழ்ந்து எத்தகைய இயல்பைப் பெற்றிருக்கின்றோமோ அதற்கேற்ற எண்ணம் நம் உள்ளத்தில் உண்டாகின்றது. உலகப்பொருள்களோடு தொடர்பு வைக்கும்பொழுது உயர்ந்த எண்ணம் உள்ளத்தில் தோன்றுமானால் அதை நாம் மேலும் வளர்க்க வேண்டும். உலகப்பொருள்களோடு தொடர்பு வைக்கும்பொழுது கீழான எண்ணம் தோன்றுமாயின் அதை அழிக்க முயலவேண்டும். உயர்ந்த எண்ணத்தை வளர்த்துக் கீழான எண்ணத்தை அழிப்பதற்கே மானுட வாழ்வு அமைந்திருக்கிறது. மனிதனாகப் பிறந்திருப்பது ஓர் அரிய வாய்ப்பு என்று பகரலாம். பரம்பொருளை அடைவது மானுடப்பிறவி ஒன்றில்தான் சாத்தியம். கிடைப்பதற்கரிய மானுடப் பிறவியைப் பரம்பொருளை அடைதல் என்னும் ஓர் அரிய காரியத்துக்குப் பயன்படுத்த நாம் திட்டம் போடவேண்டும். நம் வாழ்வை உயர்த்துவதோ, தாழ்த்துவதோ நாம்போடும் திட்டத்தைப் பொறுத்தும், வாழ்கின்ற வாழ்வைப் பொறுத்தும் இருக்கின்றது.

மனிதன் உள்ளத்தில் இருவித எண்ணங்கள் ஓயாது போராடிக்கொண்டிருக்கின்றன. அவ்விருவித எண்ணங்களுக்கு இடையில் ஏற்படுகின்ற போராட்டம்தான் வாழ்க்கை என்னும் போராட்டமாகிறது. உலக சம்பந்தமான விஷயங்களைப் பற்றிய எண்ணங்கள் அநித்தியப் பொருள்களைப் பற்றிய எண்ணங்களாகின்றன. அறிவு, ஆனந்தம், கடவுள் சம்பந்தமான எண்ணங்கள் நித்தியத்தைப் பற்றிய எண்ணங்களாகின்றன. உலக சம்பந்தமான எண்ணங்களையும், உடல் சம்பந்தமான எண்ணங்களையும் எண்ணுகின்றவளவு அநித்தியப் பொருள்களைப் பற்றிய எண்ணத்துக்கு நம் உள்ளத்தில் இடம் கொடுத்தவர்களாகின்

றோம். அறிவு, ஆனந்தம், தெய்வீக சம்பந்த மான விஷயங்களை எண்ணுகின்றவளவு உள்ளத்தில் நித்தியப் பொருள்களுக்கு இடம் கொடுத்தவர்களாகின்றோம். நித்தியத்தைப் பற்றிய எண்ணங்கள் நம் உள்ளத்தில் தெய்வீக இயல்பை வளர்க்கின்றன. அநித்தியப் பொருள்களைப் பற்றிய எண்ணங்கள் உள்ளத்தில் அசுர இயல்பை வளர்க்கின்றன. தெய்வீகத் தன்மையை வளர்ப்பது நம்முடைய லக்ஷியம். அசுரத்தன்மையை வளர்ப்பது நம்முடைய லக்ஷியமன்று. நாம் உலகிலிருந்துகொண்டு உலகத்தோடு தொடர்பு வைக்கின்றோம். உலகத்தோடு நாம் இப்பொழுது வைக்கின்ற இணக்கத்தில் தவறு இருக்கிறது. தெய்வத்தோடு நாம் இணக்கம் வைப்பதுதான் சரியான இணக்கம். உண்மையில் தெய்வம்தான் இருக்கிறது. உலகமாகக் காண்பது நம் மனதின் மயக்கமாகும். தெய்வத்திடம் இருந்துகொண்டு தெய்வத்தோடு இணக்கம் வைத்துக்கொண்டிருக்கின்ற நாம் உலகில் இருந்துகொண்டு உலகத்தோடு இணக்கம் வைக்கின்றோம் என்று எண்ணுவது நாம் செய்கின்ற தவறு ஆகும். அந்தத் தவறைக் களைந்துவிட்டால் நம்மிடத்தில் தெய்வீகத்தன்மை ஓங்குகின்றது. மீண்டும் அதே தவறைச் செய்து கொண்டிருந்தால் நம்மிடத்தில் அசுரத் தன்மை வளர்ந்துகொண்டே இருக்கும்.

தெய்வத்தோடு இணக்கம் வைத்துக் கொண்டுள்ளோம் என்ற உண்மையை நாம் எப்படி அறிந்துகொள்வது? நமக்கு இந்த உலகியல் தொடர்பு எப்படி ஏற்பட்டது என்னும் கேள்வி எழலாம். தெய்வத்தோடு இணக்கம் வைத்துக்கொண்டிருப்பதற்கு இடையில், உலகத்தோடு தொடர்பு வைத்துக் கொண்டிருக்கிறோம் என்று எண்ணிக்கொண்டிருக்கின்ற தவறு அறியாமையால் நிகழ்ந்ததாகும். அவ்வறியாமை நமக்கு எப்படி வந்தது என்று தெரியாது. அறியாமையில் இருக்கிறோம் என்பதை நாம் கண்டுபிடித்து விட்டால் நம்மைவிட்டு அறியாமைஅகலுகிறது. ஒருவனுக்குப் பேய்பிடித்திருப்பதாக வைத்துக் கொள்ளலாம். பேய்பிடித்திருக்கின்ற மனிதன் "எனக்குப் பேய்பிடித்திருக்கின்றது" என்று அறிந்துகொள்வானாகில் அவனிடம் உள்ள பேய் ஓடிவிடும். மனதில் உள்ள மயக்கமே அறியாமைக்குக் காரணம். அறியாமையை அகற்றுவது நம் வாழ்வின் லக்ஷியமாகும்.

அறிவு சொரூபமாக நாம் இருக்கின்றோம். ஆனந்த சொரூபமாக நாம் இருக்கின்றோம். ஆனால் அவ்வுண்மையை மறந்த நிலையில் நாம் இப்பொழுது இருக்கின்றோம். இம் மறதியை அகற்றிவிட்டு அறிவு சொரூபமாகவும், ஆனந்த சொரூபமாகவும் இருக்கிறோம் என்பதை ஞாபகப்படுத்திக்கொள்ள வேண்டும். அவ்வுண்மையை நாம் ஞாபகப்படுத்திக்கொள்கின்றவளவு நம்மிடத்தில் தெய்வத்தன்மை ஓங்குகின்றது. அடுப்பிலுள்ள நெருப்பில் சாம்பல் மூடிப் பூத்துக் கிடக்கும்பொழுது அதைச் சற்று ஊதிக் கொடுத்தால் அதில் தணல் உண்டாக ஆரம்பிக்கும். பூத்துக் கிடந்த நெருப்பு ஊதிக்கொடுத்தவுடன் சுடர் விட்டு எரிய ஆரம்பிக்கிறது. அங்ஙனம் நம்மிடத்தில் மங்கிக் கிடக்கின்ற அறிவைச் சிந்தனை செய்து சுடர்விட்டுப் பிரகாசிக்கும்படி செய்யவேண்டும். அறிவை வளர்ப்பதற்குச் சிந்தனை செய்வது அவசியமாகிறது. தெய்வத்தைப்பற்றியும், தெய்வீக மகிமைகளையும் சிந்தனை செய்து பார்ப்பது நம்மிடத்தில் தெய்வீகத் தன்மையை வளர்ப்பதற்கு உபாயமாகிறது. உள்ளத்தை உறுதிப்படுத்துவதும், உள்ளத்தைத் தூய்மைப் படுத்துவதுமாகிய எண்ணங்களை எண்ணிப் பழகவேண்டும். அத்தகைய எண்ணங்கள்தாம் தெய்வீக எண்ணங்களாகின்றன. மனத் தளர்வை ஒழித்து மனோதிட்பம் உடையவர்களாக நாம் விளங்குதல் வேண்டும். மனோதிட்பத்தை உண்டுபண்ணும் எண்ணங்களை நாம் அடிக்கடி ஞாபகத்துக்குக்கொண்டு வரவேண்டும். அவ்வெண்ணங்களை ஆழ்ந்து எண்ணி அவ்வெண்ணங்கள் மயமாக நாம் மாறி அமையவேண்டும்.

அபயம் அல்லது பயமின்மை வாழ்க்கையில் பெறுகின்ற பயிற்சி ஆகும். அபயத்தை உள்ளத்தில் உண்டாக்குகின்ற எண்ணத்தை நாம் எண்ணிப் பழகவேண்டும். பொதுவாக உயிர்கள் பயப்படுகின்ற இயல்புடையவைகளாகவிருக்கின்றன. சிற்றுயிர் முதல் பேருயிர் வரை பயத்துக்கு ஆளாகி இருக்கின்றது. நம்

மிடத்திலுள்ள தெய்வத்தன்மையை மறந்திருப்பது பயத்துக்கு ஒரு காரணமாகும். மீண்டும் தெய்வத்தன்மையை ஞாபகமூட்டிக்கொண்டால் பயம் நீங்குகின்றது. நம்மைப்பற்றிய உண்மையை உள்ளபடி அறியாது நாம் அழிந்து போவோம் என்று கற்பனை பண்ணிக்கொண்டிருக்கின்றோம். அத்தகைய எண்ணமே நம்முடைய பயத்துக்குக் காரணமாகும். நம்முடைய நிஜசொருபமாகிய ஆத்ம சொருபத்துக்கு என்றைக்கும் அழிவில்லை. அவ்வுண்மையை உணராத நாம் அழிந்துபோவோம் என்று பயந்துகொண்டிருக்கின்றோம்.

மரண தத்துவத்தை நாம் அறிந்திருக்க வேண்டும். ஆத்மசொருபமாகிய நமக்கு மரணமில்லை. உடலுக்குத்தான் அழிவு உண்டு. உடல் அழிவதைக் குறித்து நாம் அஞ்ச வேண்டியதில்லை. உறங்குவது நாள் தோறும் நமக்கு ஏற்படும் அனுபவம் ஆகிறது. கனவற்ற ஆழ்ந்த உறக்கத்திற்கும், மரணத்திற்கும் என்ன வித்தியாசம் என்பதை ஆராய்வோம். எந்தச் சரீரத்தோடு ஆழ்ந்த உறக்கத்திற்குச் சென்றோமோ அதே சரீரத்தோடு விழித்து எழுந்து வருகின்றோம். ஆனால் மரணத்தை அடையும் மனிதன் புது சரீரத்தோடு பிறப்பு எடுக்கின்றான். இதுதான் மரணத்திற்கும் ஆழ்ந்த உறக்கத்திற்கும் உள்ள வித்தியாசம். தூங்கி எழுந்து வரும்பொழுது இதே சரீரத்துடன் வருகின்றோம். மரணம் அடைகிற பொழுது இந்தச் சரீரத்தை இழந்து விடுகின்றோம். மரணத்தில் இந்தச் சரீரம் போய்விடுவதால் மரணத்தைக் குறித்துப் பயப்படுகிறோம். நாம் சரீரம் அல்ல என்பதை அறிந்து விட்டால் பயத்துக்கு ஆங்கு இடமில்லை. சரீரம் ஓயாது மாறி அமைந்து கொண்டிருக்கின்றது. சரீரம் மாறி அமைவதற்கிடையில் நம்மிடத்தில் மாறாதது ஒன்று இருக்கின்றது. அதற்கு என்றைக்கும் அழிவில்லை. அழியாத ஆத்ம சொருபம் தான் என்று உணருகின்றவனுக்கு மரணபயமில்லை. உடலைத் தான் என்று கருதுபவன் உடலுக்கு அழிவு வருகின்ற பொழுது தனக்கே அழிவு வந்ததாக எண்ணுகின்றான். நாம் உடையை மாற்றி அமைத்துக் கொள்வது போன்று சரீரத்தை மாற்றி அமைத்துக் கொள்கின்றோம். உடல் ஆத்மாவுக்குக் கவசமாக இருக்கின்றது. மரணத்தின் மூலம் பழைய கவசத்தை எடுத்து விட்டுப் புதிய கவசம் போடுகின்றோம். இதை உணர்ந்து விட்டால் மரணத்தைக் குறித்து அஞ்சவேண்டியதில்லை. அழிந்து போகும் உடல் தான் அன்று என்பதை மனிதன் உணர வேண்டும்.

மனிதன் அறிவு சொருபம்; ஆனந்த சொருபம். இதை ஆழ்ந்து எண்ணுபவன் அழியாதவன் ஆகிவிடுகின்றான். நான் அழிந்து போவேன் என்று எண்ணிக் கொண்டிருக்கிறவனுக்கு அழிவு வந்துகொண்டே இருக்கிறது. மனிதன் தன் எண்ணப்படி மாறி அமைகின்றான். விறகைச் சுமந்து செல்பவனை விறகு என்று அழைத்தால் நம்மிடம் வருவான். விறகைச் சுமந்து செல்வதால் தன்னை விறகு மயமாகப் பாவித்துக் கொள்கின்றான். மனித சரீரத்தைத் தாங்கியிருப்பவன் தன்னை மனிதனாகவே கருதிக் கொள்கின்றான். மனிதன் என்ற சிந்தனையை ஒழித்து ஆத்ம சொருபம் என்னும் சிந்தனையை வளர்த்து வரவேண்டும்.

பாரதப்போரில் போர்க்களத்துக்கு வந்த அர்ஜுனன் உறவினர்களையும், குருமார்களையும் எதிர்த்துப் போரிடவேண்டிய நிலையை அறிகின்றான். இவர்கள் யாவரையும் அழித்து ராஜ்ஜியத்தைப் பெறுவதனால் என்ன லாபம் என்று மதிமயக்கம் அடைகின்றான். ஆத்ம சொருபத்தைப் பற்றி அர்ஜுனனுக்கு விளக்கி அவன் மயக்கத்தைத் துடைக்கின்றார் கிருஷ்ணன். "நீ உண்மையில் யாரையும் கொல்வதில்லை. கொல்லப்படுகின்ற பொருள் எதுவும் இல்லை. ஆத்மசொருபத்துக்கு அழிவில்லை. கொல்லுகிறேன் என்று எண்ணுவதும், கொல்லப்படுவேன் என்று எண்ணுவதும் மதிமயக்கம். இம்மதிமயக்கத்தால் உன் உள்ளத்தில் கோழைத்தனம் இடம் பெற்றிருக்கிறது. மயக்கத்தை ஒழித்துவிட்டுக் கோழைத்தனத்தை அகற்றிப் போரிடுவாயாக" என்று கிருஷ்ணன் அர்ஜுனனுக்குப் போதிக்கின்றார்.

உலகில் மயக்கத்தை உண்டுபண்ணிக்கொள்வதற்கு நாம் வாழ்பவர்களல்லர். உடல் திட்பமுடையவர்களாகவும், மனவுறுதி உடையவர்களாகவும் மாறி அமைவதற்கு நம் வாழ்வு அமைந்திருக்கிறது. ஜடம்போன்று செயலற்ற

நிலையில் இருப்பதற்கு நாம் பிறந்தவர்களல்லர். செயல்திறன் உடையவர்களாகவிருந்து பிறகு செயலையும் கடந்து அப்பால் போகவேண்டும். செயலைக்கடந்து போவதுதான் வாழ்வின் முடிந்த நிலையாகும். கோழைத்தனத்துக்கு ஒருபொழுதும் இடந்தரலாகாது. பலர் கோழைத்தனத்தை அஹிம்சை என்று பொருள் படுத்திவிடுகின்றனர். கோழை ஒருவன் அஹிம்சையைக் கையாளமுடியாது. தனக்கு எதிரியாக இருப்பவனோடு போர் புரிந்து அவனை ஒடுக்கச் சக்தியில்லாதவன் எதிரியைப் பார்த்துப் பாவம் கிடக்கிறான் என்று சொல்வானானால் அது இரக்கக் குணமன்று. கோழைத்தனத்தால்தான் அவன் அவ்வாறு சொல்லுகின்றான். எதிரியை வெல்லக்கூடிய வலிவு தன்னிடத்திலிருந்தும் எதிரிக்கு ஒரு தீங்கும் செய்யாது எதிரியின் மூலம் ஏற்படும் துன்பத்தை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொள்பவன் உண்மையான வீரனாகின்றான். மன்னுயிர்கள் தனக்குச் செய்யும் தீங்கை மகிழ்ச்சியோடு ஏற்றுக்கொண்டு மன்னுயிர்களுக்குத் தீங்கு செய்யாதவன் பயத்தை வென்றவனாகின்றான். தான் ஆத்ம சொரூபம் என்ற உணர்வுக்கு அருகில் அவன் போய்க்கொண்டிருக்கின்றான்.

தான் ஆத்ம சொரூபம், உடல் அன்று என்கின்ற உண்மையை உணர்வதற்கு ஏற்ப மன்னுயிர்களிடத்திலிருந்து தீங்கு வருவதில்லை. சுவாமி விவேகானந்தர் பரிவ்ராஜக வாழ்க்கையில் இருந்தபொழுது ஒருசமயம் காட்டுக்குள் இருந்தார். அப்பொழுது வாழ்க்கையைப் பற்றிய விரக்தி மனப்பான்மை அவருக்கு வந்துவிட்டது. "நான் இத்தனை ஆண்டுகள் வாழ்ந்திருந்து வாழ்க்கையில் என்ன சாதித்திருக்கிறேன்? இவ்வுடலைப் பெற்றிருப்பதனால் யாது பயன்? இந்த உடலை உகுத்துவிட்டால் என்ன?" இங்ஙனம் அவர் எண்ணிக்கொண்டிருந்தபொழுது வெகுதூரத்துக்கு அப்பால் புலி ஒன்று அவரை நோக்கி வந்துகொண்டிருப்பதைப் பார்த்தார். மகிழ்ச்சியோடு அப்பொழுது அவர் "இவ்வுடல் வீணாகப் போய்விடும் என்று இருந்தேன். இப்புலிக்கு இது உணவாகட்டும்" என்று எதிர் நோக்கி இருந்தார். புலி சற்று தூரத்தில் நின்று இவரை ஏறிட்டுப் பார்த்து விட்டு வேறொரு வழியாகப்போய்விட்டது. அப்பொழுது மாலைவேளையாக இருந்தது. "புலி சுற்றி அலைந்துவிட்டு மீண்டும் இந்த வழியாகத்தான் வரும்; அப்பொழுது என் உடலை அது உணவாக ஏற்றுக்கொள்ளும்" என்று எண்ணி இரவு முழுவதும் அங்கேயே காத்திருந்தார். ஆனால் புலி திரும்பி வரவில்லை. உடலை மறந்து ஆத்ம சொருபமாகத் தம்மைக் கருதி இருந்தமையால் சுவாமி விவேகானந்தர் புலியைப் பார்த்துப் பயப்படாது புலிக்கு உணவாகத் தம் உடலைக் கொடுக்க ஆயத்தமாக விருந்தார். நம் எண்ணம்தான் மற்றொரு உயிரின் உள்ளத்தையும் தாக்குகிறது. எதிரியைப் பார்த்து உண்மையில் நமக்குப் பயமில்லை என்றால் எதிரியிடமிருந்து நமக்கு ஆபத்து இல்லை. மன்னுயிர்களை நாம் தாக்க வேண்டுமென்று எண்ணுகின்றபொழுது நம்மைத் தாக்க அவை முந்திக் கொள்கின்றன. புலியைப் பார்த்ததும் நமக்குப் பயம் வந்துவிடுகிறது. அது நம்மைத் தாக்கிக் கொன்றுவிடும் என்று பயந்து அதை ஒழிக்க முயல்கிறோம். அது நம்மைக் கண்டு பயந்து நம்மை ஒழிப்பதற்கு நம்மீது பாய்கிறது. ஆக உயிர்களுக்கிடையில் ஏற்பட்ட பயத்தினால் உயிர்கள் ஒன்றையொன்று தாக்கிக் கொள்கின்றன. தாக்குதல் என்ற செயல் பயத்தினால் நிகழ்கிறது. உணவை முன்னிட்டும் உயிர்கள் மற்ற உயிர்களைத் தாக்குவது உண்டு. சிங்கம் பசி ஏற்படும் பொழுதுதான் மற்ற உயிர்கள்மீது பாயும். புலி போன்ற மற்ற விலங்குகள் பயத்தினால் மற்ற உயிர்களைத் தாக்குவதும் உண்டு. ஆத்ம சொருபமாக நம்மை உணர உணர நம் உள்ளத்தை விட்டுப் பயம் போய்விடுகிறது.

சுவாமி விவேகானந்தர் வாழ்க்கையில் நிகழ்ந்த மற்றொரு நிகழ்ச்சியை எடுத்துக் கொள்ளலாம். ஒருசமயம் தம்பதிகள் இருவர்களோடு இங்கிலாந்தில் உள்ள கழனியில் சுவாமி விவேகானந்தர் நடந்துபோய்க்கொண்டிருந்தார். அவ்வமயம் முரட்டுத்தன்மை வாய்ந்த பொலிகாளை ஒன்று இம்மூவரையும் நோக்கி வேகமாக வந்துகொண்டிருந்தது. அக்காளையைப் பார்த்த பெண்பாலுக்கு மயக்கம் வந்துவிட்டது. எனவே அவள் மயக்கம் போட்டுக் கீழே விழுந்துவிட்டாள். அந்த அம்

மையின் கணவனார் காளையிடமிருந்து தப்பித்துக்கொள்வதற்காகக் கழனியிலிருந்தமரத்தின் மீது ஏறிக்கொண்டார். சுவாமி விவேகானந்தர் அசையாது நின்று அக்காளையை ஏறிட்டுப் பார்த்துக்கொண்டிருந்தார். அவர் நின்றதற்குச் சற்றுதூரத்துக்கு அப்பாலேயே காளை நின்றுகொண்டு ஏறிட்டுப் பார்த்தது. அக்காளை சிறிது நேரம் அவரைப் பார்த்துவிட்டு வந்த வழியே திரும்பிப்போய்விட்டது. காளை காட்சியிலிருந்து மறைந்ததும் மரத்தின்மீது இருந்த அன்பர் கீழே இறங்கிவந்து தம் மனைவியின் முகத்தில் நீர் தெளித்து, மனைவியினுடைய மயக்க நிலையைத் தெளிவித்தார். அதன் பிறகு விவேகானந்தரைப் பார்த்து அவர் கேட்டதாவது: "முரட்டுக்காளை உங்களை நோக்கி கோபத்துடன் வந்தது. நீங்கள் அசையாமல் நின்று அதை ஏறிட்டுப் பார்த்துக் கொண்டிருந்தீர்கள். எந்த நோக்கத்தோடு நீங்கள் அதை அப்படிப் பார்த்தீர்கள்?" அதற்கு விவேகானந்தர் பகர்ந்த விடையாவது: "முரட்டுத்தனம் வாய்ந்த காளை என்னை நோக்கி வேகத்தோடு வந்ததைப் பார்த்ததும் என் உள்ளத்தில் எனக்கு ஒரு எண்ணம் தோன்றியது. இவ்வளவு வேகமாக வரும் காளை என் உடலைத்தூக்கி வீசினால் என் உடல் எவ்வளவு உயரம் மேலே எழும் என்பதை அளந்து பார்க்கலாமென நான் நினைத்துக் கொண்டிருந்தேன்." பயத்தை வென்றதற்கு இது நல்ல அறிகுறியாகும். உடலை வீசி எறிந்தால் அது எவ்வளவு தூரம் உயரப்போகும் என்பதை ரசிக்க சுவாமி விவேகானந்தர் விரும்பினார். உடல் வேறு, தாம் வேறு என்று அவர் உணர்ந்திருந்தமையால் அப்படி எண்ணுவது அவருக்குச் சாத்தியமாயிற்று. உடலோடு நாம் கட்டுண்டு கிடக்கின்றோம். உடல் அழியும் பொழுது நாமே அழிந்துபோய் விடுவதாக எண்ணுகின்றோம். ஆகையால் நம்உள்ளத்தில் பயம் குடிகொண்டிருக்கிறது. நம்உடல் வேறு, ஆத்ம சொருபம் வேறு என்பதை உணர்ந்து ஆத்ம சொருபமாக நம்மை உணருகிறபொழுது உள்ளத்தைவிட்டுப் பயம் நீங்குகிறது.

நாம் அழியாத ஆத்ம சொருபம் என்று ஆழ்ந்து எண்ணுவதோடு நாம் ஆத்ம சொருபமாக ஆகவேண்டும் என்று நாள்தோறும் இறைவனைப் பிரார்த்திக்க வேண்டும். அழிந்து போகக்கூடிய பொருள்களின்மீது பற்றுதல் வைக்கக்கூடாது. அழிந்து போகும் பொருள்களின்மீது வைக்கும் பற்றுதல் பயத்தை வளர்க்கிறது; துக்கத்தை உண்டாக்குகிறது. அழியாத ஆத்ம சொருபம் தாங்கள் என்று உணர்கிறவர்களுக்குப் பயம் நீங்குகிறது; அறிவு ஓங்குகிறது; துக்கம் தொலைகிறது. உடல் நமக்கு ஒரு கருவியாக இருக்கிறது. உடல் என்னும் கருவியைக்கொண்டு ஆத்ம சொருபத்தை நாம் உணர்ந்தாகவேண்டும். ஆத்ம சிந்தனையை நாள்தோறும் வளர்த்து அழியாதவர்கள் என்ற எண்ணத்தில் உறுதிப்பாடு உடையவர்களாக நாம் மாறி அமையவேண்டும்.

இமயமலையில் சிவயோகி ஒருவர் 'சிவோஹம், சிவோஹம்' என்று உச்சரித்து வந்தார். நான் சிவமாக இருக்கிறேன் என்பது அதற்குப் பொருள். அவர் சிவோஹம் என்று உச்சரித்ததோடு தம்மைச் சிவமயமாகவே உணர்ந்து வந்தார். உடல் உணர்வைக் கடந்து சிவ உணர்வில் தோய்ந்து சிவமயம் ஆகிவிட்டார். சிவோஹம் என்று அவருடைய நா உச்சரிக்க அவர் உள்ளம் சிவத்தில் ஒன்று பட்டுவிட்டது. அவர் சிவோஹம் என்று சொல்லிக் கொண்டிருக்கும் பொழுதே புலி ஒன்று அவர் உடலை கவ்விச் சென்றது. ராமகிருஷ்ணருடைய நேர் சிஷ்யர்கள் இக்காட்சியைக் கண்டனர். உடல் உணர்வைக் கடந்து ஆத்ம சொருபத்தில் லயித்திருந்த அவர் உடல் போவதை முன்னிட்டோ உடல் இருப்பதை முன்னிட்டோ கவலைப்படவில்லை. யாண்டும் ஆனந்த சொருபத்தில் லயித்திருந்தார். உடல் உணர்வை வென்றவர்கள் 'இன்பமே எந்நாளும் துன்பமில்லை' என்னும் கோட்பாட்டில் உறுதியுடையவர்களாக இருக்கின்றார்கள். ஆத்ம சொருபம் தாங்கள் என்று உணர்ந்தவர்கள் தம்மில் தாம் திருப்தி உடையவர்களாக பரமானந்தத்தில் இருக்கின்றார்கள். அத்தகைய மகோன்னத நிலையை உள்ளம் அடையும்பொழுதுதான் அபயம் என்ற நிலை நமக்கு ஏற்படுகிறது. சொருப ஞானம் பெறுவதற்குச் சாதனை புரியவேண்டும். இடைவிடாத சாதனையின் மூலமாகவும், வைராக்கியத்தின் மூலமாகவும் சொருப ஞானத்தைப் பெறலாம். (தொடரும்)

---

# சங்க இலக்கியங்களில் சமயக் கருத்துக்கள்

(வித்துவான் ஆதி. பாலசுந்தரன் M.A.)

**உயிர் அல்லது ஆன்மா:**

நமது உடம்பு ஒரே இடத்தில் நிலையாக இருப்பது இல்லை. அங்கும் இங்குமாக இயங்கு கிறது. உடம்பு ஒரே இடத்தில் இருக்கும் சில சமயங்களிலும், மனம் வேறு ஏதாவது ஓர் இடத்திற்குச் சென்று அலைகிறது. தூங்கு கிறோம்; தூங்குகின்ற சமயத்திலும் பல நினைவு அலைகள் உள்ளத்தில் உண்டாகின்றன. இவ்வாறு உடம்பு இயங்குவதற்கும், மனம் இயக்கம் பெறுவதற்கும் மூல காரணமாக இருப்பது உயிர் ஆகும். உடம்பில் உயிர் இல்லாவிட்டால் இயக்கம் உண்டாகுமா? மனம் எங்கேயாவது அலைந்து திரிந்து செயற்படுமா? இல்லையே!

உலகத்தில் எத்தனையோ பொருள்கள் படைக்கப்பட்டுள்ளன. ஒரே இனப் பொருளில் கூடப் பலவிதங்கள் உண்டு. உயிர் உள்ள பொருள்களும் உண்டு; உயிர் இல்லாத பொருள்களும் உண்டு. உயிர் இல்லாத பொருள்கள் இவ்வளவுதான் என்பதை முழுமையாக வரையறுத்துச் சொல்லுவதற்கில்லை.

உயிர் உள்ள பொருள்களை மக்கள் இனம், மற்ற உயிர் இனம் என இரண்டு வகையாகப் பிரித்துச் சொல்லி இருக்கிறார்கள். மக்கள் இனம் உயர்ந்த இனம். விலங்குகள், பறவைகள், ஏனைய சிற்றுயிர்கள், மரம் செடி கொடி இனங்கள் ஆகியவை தாழ்ந்த இனங்கள்.

மரம், செடி, கொடி, புல் ஆகியவை ஓர் அறிவு உயிர்கள். சிப்பி, சங்கு முதலியவை இரண்டு அறிவு உயிர்கள். செல், எறும்பு முதலியவை மூன்று அறிவு உயிர்கள். தும்பி, வண்டு முதலியவை நான்கு அறிவு உயிர்கள். பறவை, விலங்கு முதலியவை ஐந்து அறிவு உயிர்கள். மக்கள் ஆறு அறிவு உயிர்கள்.

ஆறாவது அறிவு எது? அது பகுத்தறிவு. ஒவ்வொன்றாகப் பாகுபாடு செய்து, நுணுக்கமாக ஆராயக்கூடிய அறிவு பகுத்தறிவு. நல்லது எது? தீயது எது? என்பதைப் பகுத்துப் பார்த்து, தீமை தரக்கூடியவற்றை விலக்கி விட்டு, நன்மை தரக்கூடியவற்றை மட்டுமே ஏற்றுக்கொள்ளக்கூடிய அறிவு ஆறாவது அறிவாகிய பகுத்தறிவு.

**உயர்திணை—அஃறிணை:**

திணை என்ற சொல்லுக்குப் பகுப்பு என்பது பொருள். மக்களை உயர்திணை என்று நம் முன்னோர்கள் சொன்னார்கள். உயர்ந்த பகுப்பு, உயர்ந்த பிரிவு என்பது பொருள். மக்கள் அல்லாத ஏனைய உயிர்களையும், ஜடப்பொருள்களையும் அஃறிணை என்றார்கள். அல்திணை அதாவது உயர்திணை அல்லாத திணை என்றார்கள். மக்களைத் தவிர ஏனைய உயிர் இனங்கள் தாழ்ந்த பிரிவைச் சார்ந்தவை.

திணை என்ற சொல்லுக்கு ஒழுக்கம் என்ற பொருளும் உண்டு. உயர்ந்த ஒழுக்கத்தையுடைய மக்கள் உயர்திணை. ஒழுக்கத்தை அறியாத உயிர் இனங்கள் அஃறிணை.

பொருள்களைப்பற்றி நுட்பமாக அறிந்து கொள்வதற்கு இந்தப் பாகுபாடு மிகவும் வேண்டியதாக இருந்தது.'

''மக்கள் தேவர் நரகர் உயர்திணை
மற்றுஉயிர் உள்ளவும் இல்லவும் அஃறிணை''

என்கிறார் தொல்காப்பியர். மக்கள் அனைவரும் உயர்திணை. நல்வினை செய்வதன் காரணமாகத் தேவர்களுக்கு உரிய உடம்பைப் பெற்றுத் தேவர்கள் ஆகிறார்கள். தீவினை செய்வதன் காரணமாக நரகர்களுக்குரிய உடம்பைப் பெற்று நரகர்கள் ஆகிறார்கள்.

மனிதர்களே தேவர்களாகவும், நரகர்களாகவும் ஆகிவிடுவதால் அவர்களையும், உயர்திணையாகவே சொல்லுகிறார். பகுத்தறிவு இல்லாத உயிர்கள், ஜடப்பொருள்கள் ஆகியவை அஃறிணை.

எனவே, நம் முன்னோர்கள், உலகத்தில் உள்ள பொருள்களையெல்லாம் உயர்திணை, அஃறிணை எனப் பாகுபாடு செய்திருந்தார்கள் என்பது தெரிகிறது.

ஆன்மா என்றால் என்ன? அதற்குரிய இலட்சணம் யாது? ஆன்மாவுக்கும் கடவுளுக்கும் தொடர்பு உண்டா? அப்படித் தொடர்பு இருந்தால், அது எப்படிப்பட்ட தொடர்பு? ஆன்மாவுக்கும் உடம்புக்கும் உரிய தொடர்பு என்ன? உடம்பை விட்டு உயிர் பிரிந்து போனால் உயிர்

எங்கே இருக்கும்? என்பன போன்ற வினுக்களை எழுப்பினர்கள். தங்களின் தெளிவான, கூர்மையான சிந்தனையின் மூலமாக இவ்வினுக்களுக்கு விடை கூறினர்கள். இத்தகைய விடைகள் அச்சான்ருேர்களின் நெடுநாளைய சிந்தனையின் விளைவாக முகிழ்த்து வந்தவை ஆதலின், பண்புடையாளர் அனைவராலும் பாராட்டப்படுகின்றன. அவை, மனிதனை நற்செயலைச் செய்யத்தூண்டி, இறைவனேடு நல்லிணக்கம் கொள்ளப் பெரிதும் உதவுகின்றன.

**ஆன்மா என்ருல் என்ன?**

ஆன்மா என்பது ஒரு பொருள். அதற்கு எந்தவித உருவமும் இல்லை. நிறம் இல்லை. நீளம் அகலம் முதலிய கனபரிமாணத் தோற்றம் இல்லை. ஆன்மா நமது கண்ணுக்குப் புலனுகாது. ஆனல், ஆன்மா என்ற ஒன்று உண்டு என்பது மட்டும் நிச்சயம் ஆகும். ஆன்மாக்கள் பல உண்டு. அவை ஒருநாளும் அழியாதவை. என்றும் நித்தியப் பொருளாக இருப்பவை.

உலகத்தில் எறும்பு, இன்னும் மிகச் சிறிய உயிர் இனங்கள் முதலாக யானை போன்ற பெரிய உயிர் இனங்கள் வரை எண்ணிக்கையில் அடங்காத உயிர் இனங்கள் உள்ளன. அத்தகைய ஒவ்வோர் உடம்புக்குள்ளும் ஒவ்வோர் உயிர் உண்டு. உடம்புதான் அழியும்; உயிர் ஒருபோதும் அழியாது. இக்கருத்துக்கள் வேத நூல்களிலே சொல்லப்பட்டவற்றிற்குத் தரப்பட்ட ஒருவகை வியாக்கியானம் ஆகும்.

ஆன்மா என்று சொல்லக்கூடிய ஆத்மா ஒன்றே ஒன்றுதான்; பல ஆத்மாக்கள் இல்லை; அந்த ஒரே ஒரு ஆத்மாவும் பரமாத்மாதான். பரமாத்மாவே பல ஆத்மாக்களாகத் தோன்றுகிறது. ஒரே ஒரு மூலப்பொருளாக உள்ள பிரம்மமே பல ஜீவன்கள் ஆகின்றது. வெள்ளை நிறப்பூ ஒன்று சிவப்பு நிறப்பூவாகத் தோன்றுவது போன்று,பிரம்மம் ஆத்மாவாகத் தோன்றுகிறது.

வேதத்தில் ஆத்மாவைப் பற்றிச் சொல்லப்பட்ட கருத்துக்கு இதுவும் ஒரு விளக்கமாகும்.

எறும்பு உடலுக்குள்ளே இருக்கின்ற உயிர் சிறியது. யானை உடம்புக்குள்ளே இருக்கும் உயிர் பெரியது. அதாவது, ஆன்மா என்ற உயிர், தான் குடிபோகும் உடம்புக்குத் தக்கபடி தன்னுடைய வடிவத்தைச் சுருக்கிக்கொள்ளும்; பெருக்கிக்கொள்ளும். உடம்பு வளர்ந்து வருவதுபோன்று, ஆன்மாவும் படிப்படியாக வளர்ந்து வரும்.

இப்படி ஆன்மாவுக்கு விளக்கம் சொல்லுபவர்கள் சமண சமயத்தவர்.

உயிர் கொல்லுவதும் இல்லை; கொல்லப்படுவதும் இல்லை. பிறப்பதும் இல்லை; இறப்பதும் இல்லை. எப்போதும் இல்லாமல் இருந்து புதிதாக உண்டாகி விடவில்லை. அப்படி உண்டான பிறகு இல்லாமல் போவதுமில்லை. பிறப்பு இல்லாத ஆன்மா மரணம் அடைவதும் இல்லை. கொல்லப்படுவது உடல் தானே அன்றி ஆன்மா அன்று.

நைந்துபோன ஆடைகளைக் களைந்து விட்டுப் புதிய உடைகளை அணிவது போல, உடலைக் களைந்துவிடுகிறது ஆன்மா; அவ்வாறு களைந்து விட்டுப் புது உடலைப் பூணுகிறது.

இவ்வாறு ஆன்மாவைப் பற்றிக் கீதையில் கண்ணன் அர்ச்சுனனுக்குச் சொல்லுகிருர்.

ஆன்மாவைப் பற்றிச் சைவ சமயம் என்ன கூறுகிறது? பதி என்ற கடவுள் அனுதியானவர்; பசு என்ற ஆன்மாவும் அனுதியானது. பாசம் என்ற மயக்க உணாவும் அனுதியானது. உருவம் அற்ற கேவல நிலையில் உயிர் செயலற்றுக் கிடக்கிறது. அவ்வாறு செயல் அற்றுக் கிடக்கும் ஆன்மாவின் மீது இறைவன் கருணை கொள்ளுகின்ருன். கருணை கொண்டு, அந்த ஆன்மாவுக்கு ஏற்றபிரகாரம் உடம்பைக் கொடுக்கிருன். உடம்பைக் கொடுத்து உலகிலே பிறக்கும்படி செய்து, உலக இன்பங்களை அனுபவிக்குமாறு செய்கிருன். அந்த ஆன்மா செய்கின்ற நல்வினை தீவினைகளுக்கு ஏற்றவாறு, தான் எடுத்திருக்கும் அந்த உடம்பை நீக்கிவிட்டு, மறுபடியும் பூமியில் பிறவி எடுக்குமாறு செய்கிருன். பாசத்தால் கட்டுண்டு, ஆன்மா தன்னைப்பற்றியும், இறைவனைப் பற்றியும் அறிய வேண்டியதுதான் தன்னுடைய கடமை என்பதைப்பற்றி அறியாமல் இருக்கிறது. இப்படிக் கொஞ்சகாலம் இருக்குமாறு ஆன்மாவை விட்டு வைக்கிருன் இறைவன். பிறகு உரியகாலம்—வினைகழியும் காலம்—

பக்குவகாலம் வந்ததும் இறைவன் ஆன்மா வைத் தன்பால் ஈர்த்து, ஆன்மாவைப் பற்றி ஆன்மாவுக்கு உணர்த்துகிறான்.

ஓர் ஆன்மா தான் செய்கின்ற நல்வினை தீவினைகளுக்குத் தகுந்தபடி பல பிறவிகளை எடுக்கிறது. ஒவ்வொரு பிறவியிலும் அத னுடைய உடம்பு வேறுபடும். புண்ணிய பாவங்களுக்குத் தக்கவாறு இன்ப துன்பங் களை அனுபவிக்கும். தேவலோகம் உண்டு. நரகலோகமும் உண்டு. இறைவன் திருவடியை அடைவதுதான் முக்தி.

இவ்வாறு சைவசமய நூல்கள் சொல்லுகின் றன.

இக்கருத்துக்களைப் பற்றித் தமிழ் நூல்கள் என்ன சொல்லுகின்றன?

''மக்கள் தேவர் நரகர் உயர்திணை'' எனத் தொல்காப்பியம் கூறுகிறது.

ஆன்மா என்ற ஒன்று உண்டு என்பதும்; அது மக்களாகவும், ஏனைய உயிர்களாகவும் தோற்றத்திற்கு வரும் என்பதும், புண்ணிய பாவங்களுக்கு ஏற்றவாறு தேவர் நரகர் பிறவி அமையும் என்பதும் தொல்காப்பியர் கருத்தாக இருந்திருக்கக் கூடும்.

''இம்மைச் செய்தது மறுமைக்கு ஆம்'' [புறநானூறு: 134] இப்பிறவியிலே செய்தது மறுபிறவிக்கு வந்து உதவும் என்று புறநா னூறு கூறுவதிலிருந்து, பிறவிகள் பல உண்டு என்பதும், ஒரு பிறவிக்கும், அடுத்த பிறவிக் கும் தொடர்பு உண்டு என்பதும், ஒரு பிறவி யிலே செய்த வினைகளின் பயன்கள் அடுத்த பிறவியிலேயும் தொடர்ந்து வரும் என்பதும் தெரிய வருகின்றன.

''இம்மை மாறி மறுமை ஆயினும்
நீ ஆகியர் எம் கணவனை
யான்ஆகியர் நின்நெஞ்சு நேர்பவளே''

—[குறுந்தொகை: 49] – ''இப்பிறவி மாறி நீங்கி, மறுபிறவி ஏற்பட்டாலும், அந்தப் பிறவி யிலும் நீதான் என் கணவனாக ஆகுதல் வேண் டும்; உனது உள்ளத்துள் நிறைந்திருக்கும் மனைவியாக நானே ஆக வேண்டும்'' என்று ஒரு பெண்மணி கூறுவதாகச் சங்கநூல் குறுந் தொகை கூறுகிறது.

ஆன்மா உண்டு; அது பிறப்பது; மறுபிறவி யும் எடுப்பது; ஒரு பிறவியில் ஓர் உடம்பில் அமைந்த ஆன்மா, மறு பிறவியில் வேறு ஓர் உடம்பில் செல்லுதலும் கூடும் என்ற கருத்துக் கள் இப்பாடலின் உள்ளுறை பொருளாக அமைந்துள்ளன.

**ஆன்மாவை ஒப்புக்கொள்ளாதவர்கள்:**

ஆன்மாவைப்பற்றி நம் நாட்டில வேறு சிலர் எப்படிச் சிந்தித்து என்ன முடிவுக்கு வந்துள் ளார்கள் என்பதையும் இவ்விடத்தில் இணைத் துப் பார்க்கலாம்.

வெற்றிலை, பாக்கு, சுண்ணாம்பு என்ற மூன்று பொருள்களும் ஒன்று சேரும்போது சிவப்பு நிறம் உண்டாகிறது. அது போன்று, பஞ்ச பூதங்களின் சேர்க்கையால் இந்த உடம்பு உண் டாகும்போது, கூடவே ஒரு சக்தியும் உண்டா கிறது. உடல் அழியும்போது, தோன்றிய அந்தச் சக்தியும் அழிந்துவிடுகிறது—இவ்வாறு ஆன்மா என்ற ஒன்றை ஒப்புக்கொள்ளாத உலகாயத மதத்தினர் கூறுகிறார்கள்.

ஆன்மா என்ற ஒன்று இல்லவே இல்லை எனச் சொல்லுபவர்கள் சூன்யவாதிகள். சூன்யம் என்றால் ஒன்றும் இல்லை என்பது பொருள். பௌத்தர்களே சூன்யவாதிகள். பௌத்த மதத்திற்கு அனாத்ம வாதம் என்ற பெயரும் உண்டு.

தேகம்தான் ஆன்மா என்று கூறுபவர்களும் உண்டு. தேகமும் ஆன்மாவும் ஒன்றே என் பது இவர்களுடைய கொள்கை. இவர்கள் தேகான்மவாதிகள் எனப்படுவார்கள்.

**வினையும் பயனும்:**

வினையில் நம்பிக்கை வைப்பது இந்து சம யத்தின் உயிர்க்கொள்கை. வினை என்ற சொல்லுக்குச் செயல், காரியம் என்று பொருள் சொல்லுகிறோம். 'பிறவிக்கு ஏதுவானசெயல்', என்பதே வினை என்ற சொல்லுக்கு உரிய சிறப்புப் பொருள். எந்த வினைக்கும் விளைவு—பயன்—உண்டு என்பது அறிவியல் உண்மை யன்றோ!

இலக்கணமும் வாழ்க்கையும் ஒன்றோடு ஒன்று இணைந்தவை. வாழ்க்கைக்கு இலக் கணம் அப்பாற்பட்டதன்று. இலக்கண நூல் ஆசிரியர்கள் இலக்கணத்தில் சொற்களுக்குப் பெயர் அமைத்துள்ள விதம் அவர்களின் சமய உறைப்பையும், கடவுள் நெறி பேணுதலையும் தெளிவாக உணர்த்துகின்றது.

உயிர் எழுத்து வேறு ஓர் எழுத்தின் உதவி இல்லாமல் தானே ஒலிக்கும். உயிர் தானாய் இயங்கும் தன்மையுடையது. உயிர் எழுத்தின் உதவி இல்லாமல் மெய் எழுத்து இயங்காது. அதுபோன்று, உயிரின் உதவி இல்லாமல் மெய்யாகிய உடம்பு இயங்காது. உயிரோடு கூடிய உயிர்மெய் எழுத்து, உயிரோடு கூடிய உடம்புக்குச் சமம் ஆகும்.

பெயர்ச் சொல்லில் பெயர் என்பது ஆளைக் குறிக்கும். வினைச் சொல்லில் வினை என்பது ஆளின் செயலைக் குறிக்கும்.

பெயர்ச் சொற்கள் ஏழு வேற்றுமைகளை அடைகின்றன. அதுபோன்று உயிர் ஏழு பிறவிகளை அடைகிறது. எட்டாம் வேற்றுமை விளி வேற்றுமை. விளித்தல்—அழைத்தல். ஏழு பிறவி முடிந்து, இறைவனால் ஆன்மாக்கள் அழைக்கப்படுதலை எட்டாம் வேற்றுமையாகிய விளி வேற்றுமை குறிப்பிடுகிறது.

எழுவகைப் பிறப்பையும் எடுக்கின்ற ஆன்மா ஒன்றுதான். ஆன்மாக்களில் வேறுபாடு இல்லை. உடம்பு அளவில்தான் வேற்றுமை உண்டு. ஒவ்வொரு வேற்றுமையும், வேறுபாடுகொண்ட உடம்பை உடைய ஒவ்வொரு பிறவியைக் குறிக்கிறது. எழுவகைப் பிறவியும் தமிழ் இலக்கண ஆசிரியர்களுக்கும், சங்கப் புலவர்களுக்கும் உடன்பாடே ஆகும்.

பெயர்ச் சொற்கள், வினைச் சொற்கள், இடைச் சொற்கள், உரிச் சொற்கள் எனச் சொற்கள் நான்கு வகைப்படும். வினைச் சொல்லில் முற்று வினை, எச்ச வினை என்ற பாகுபாடு உண்டு. ஓர் ஆன்மா செய்து முடித்த வினை முற்று வினை; செய்து முடிக்காத வினை எச்ச வினை. இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் ஆகியவற்றை உணர்த்துகின்ற வினைச் சொற்கள் சஞ்சிதம், பிராரப்தம், ஆகாமியம் ஆகிய மூன்றையும் நினைவுபடுத்துகின்றன.

இலக்கண நூலாசிரியர்கள் இவ்வாறு வகுத்திருப்பது இந்து சமயத் தத்துவத்துக்குப் பொருத்தமாக அமைகிறது.

"ஆருயிர் முறை வழிப்படூஉம்" [புறநானூறு: 192.] அருமையான உயிர், ஊழ் வினைக்கு ஏற்றவாறு இயங்கும் என்பது சங்க இலக்கியக் கருத்து. ஊழ்வினைக்கு ஏற்றவாறு உயிர் இயங்கும் என்ற தத்துவக் கருத்துக்குச் சங்க இலக்கியக் கருத்து மிகவும் பொருத்தமாக அமைந்துள்ளது.

**ஆன்மாவுக்கு உரிய இயல்புகள் யாவை?:**

ஆன்மா வியாபகமாய் உள்ளது; அதாவது எங்கும் பரவி உள்ளது. ஆன்மா நித்தியமாய் உள்ளது; அதாவது என்றைக்கும் உள்ளது. ஆன்மா சித்தாய் உள்ளது: அதாவது அறிவுடைய பொருளாய் இருப்பது.

செம்பைக் களிம்பு பற்றியிருக்கும். அதுபோன்று, ஆன்மாவை ஆணவமலம் பற்றி நிற்கும். எப்போது முதல் பற்றி நிற்கும்? எப்போதும் பற்றியே நிற்கும். ஆன்மா எங்கும் வியாபகமாய் நிற்கின்ற நிலையை ஒடுக்கி, ஆன்மாவை ஓர் அணு ஆக்குவது இந்த ஆணவமலம். ஆன்மாவுக்கு இயற்கையாக அமைந்துள்ள அறிவை, இந்த ஆணவமலம் கெடுத்துவிடும். கெடுத்து அறியாமையில் ஆழ்த்தி விடும். ஆணவமலம் அநாதிகாலத்திலிருந்தே ஆன்மாவைப் பற்றி நிற்பதாகும். ஆகவே இதனை, சகசமலம் [ சகசம்—கூடப்பிறந்தது ] என்கின்றார்கள்.

ஆன்மா எந்தச் சமயத்திலும் தனித்து இருந்தது இல்லை. ஏதாவது ஒன்றைச் சார்ந்தே எப்பொழுதும் இருக்கும். பெத்த நிலை, முக்திநிலை என்ற இரண்டுவிதநிலைகள் ஆன்மாவுக்கு உண்டு. பெத்தநிலை என்பது கட்டுப்பட்ட நிலை ஆகும். அக்கட்டுப்பட்ட நிலையில் ஆன்மா ஆணவ மலத்தைச் சார்ந்து நிற்கும். முக்திநிலையில் அதாவது பந்தங்கள் நீங்கிய நிலையில் இறைவனைச் சார்ந்து நிற்கும். ஆன்மா எதைச்சார்ந்து நிற்கின்றதோ அந்தத் தன்மையை அடையும். ஆணவம் அசத்து. ஆன்மா ஆணவத்தைச் சார்ந்திருக்கும்போது அசத்தாக இருக்கும். சத்தாகிய இறைவனைச் சார்ந்திருக்கும்போது ஆன்மா சத்தாக இருக்கும்.

நிறம் இல்லாத மழைத்துளி எந்த நிலத்தில் விழுகிறதோ அந்த நிலத்தின் நிறத்தைப் பெறுகிறது. பளிங்கு எந்தப் பொருளுக்குப் பக்கத்தில் இருக்கிறதோ அந்தப் பொருளின் நிறத்தையே பெறுகிறது. அதுபோன்று, ஆன்மா எதைச் சார்ந்துள்ளதோ அதன் இயல்பைப் பெறுகிறது.

# பிரம்மச்சரிய விரதம்

( சுவாமி துருவானந்தர் )

மனமது செம்மையானல் மந்திரம் ஜபிக்க வேண்டாம் என்றனர் பெரியோர். மனதைச் செப்பனிடுவதற்கு எத்தனையோ சாதனைமுறைகள் இருக்கின்றன. அலையும் மனதை அடக்கி, ஆண்டவனை நினைக்கச் செய்வதற்குப் பெரியோர் பல விரதங்களை அமைத்து வைத்தனர். ஒவ்வொரு சமயத்திலும் இந்த விரதங்கள் ஒவ்வொரு பெயரிட்டு அழைக்கப்பெறுகின்றன. ஏகாதசி, சஷ்டி, பௌர்ணமி, அமாவாசை போன்ற புனித தினங்களில் உணவைக் குறைத்து, அல்லது உண்ணாது இறை வழிபாட்டில் ஆழ்ந்து செல்லும் ஹிந்துக்கள் இந்துமதத்தில் இருப்பதுபோன்று மற்ற மதங்களிலும் பக்தி சிரத்தையோடு நோன்பு நோற்று அவரவர் போக்கில் வழிபாடியற்றுகின்றனர். 'லங்கணம் பரம ஔஷதம்' என்று வடமொழியில் ஒரு கோட்பாடு உண்டு. மாதம் அல்லது வாரத்திற்கு ஒரு நாள் எதுவும் உண்ணாது வயிறைக் காலியாக அதாவது பட்டினியாகப் போடுவது மருந்துகளில் எல்லாம் சிறந்த மருந்தாகக் கருதப்படுகிறது. இதன் மூலம் உடலிலுள்ள கழிவுப் பொருள்கள் ஜீரணிக்கப்பட்டு உடல் நோய் எதுவுமின்றி ஆரோக்யமாயிருக்கின்றது. அத்தகைய நாட்களில் வயிறு காலியாக இருப்பதால் மனதும் தெய்வீகச் சிந்தனையில் சுலபமாகச் செல்லுகிறது. ஆகவே நம் முன்னோர்கள் உடலுக்கும் மனதிற்கும் நலம் விளைவிக்கும் செயல்களைச் சமயத்தோடு இணைத்து வைத்தனர். விரதங்கள் பல வகைப்படும். உண்ணாவிரதம், மௌன விரதம், சத்தியவிரதம், அஹிம்சா விரதம் போன்ற தெய்வீகப் பண்புகளைவளர்க்கும்நெறிகள் விரதங்கள் என்று வழங்கப்படுகின்றன. எல்லாப் பண்புகளும் தன்னளவில் உயர்ந்தனவாக இருந்தாலும் இவற்றிற்கெல்லாம் உயர்வாகக் கருதப்படுவது, அனைத்திலும் சிறந்ததாகக் கருதப்படுவது, பிரம்மச்சரியவிரதம் ஆகும். அதைக் காப்பது விரதம் என்று ஔவை போன்றஅனைவரும் கூறியுள்ளார்கள்.

மானுட வாழ்க்கையை வீடு கட்டுவதோடு ஒப்பிடலாம். அவ்வீட்டுக்கு வெளியலங்காரத்தைவிட அஸ்திவாரமே முக்கியமாக வேண்டப்படுவது. அஸ்திவாரமில்லாத வீடு அழிவுக்கு ஏதுவானதாகும். அங்ஙனம் மானுடப்பிறவி மிகவும் போற்றுதற்குரியதொன்று. விண்ணகத் தேவர்களும் முக்தியாம் பெருநிலையெய்த மானுடப்பிறவி எடுக்க இப்பூவுலகுக்கு வருகின்றனர் என்றால் அதன் மகிமையை என்னென்பது! அத்தகைய மானுடப்பிறவி எடுத்தும் இன்பமே எந்நாளும் துன்பமில்லை என்று வீரவசனம் பேசிய நல்லவர்கள் பிறந்த நாட்டில் பிறந்த நாம் துன்பத்திற்கும், துயரத்திற்கும், அல்லலுக்கும், அழுகைக்கும் இடம் கொடுத்து அறியாமை இருளில் கிடந்து அலைந்து திரிகிறோமே! மரணத்திற்குப்பின் மனிதனின் நிலை என்ன என்று மறலியிடம் வினா எழுப்பிய நசிகேதன், வீடுபேறு எய்தியே தீருவேன் என்று விஷ்ணு பதம் பெற்ற துருவன்; அனல்வாதம், புனல்வாதத்தில் வெற்றிகண்டு சமணரைவென்ற ஞானசம்பந்தர் போன்றவர்கள் இந்தப் புண்ணிய பூமியில் அவதரித்து நம் பாரதத்தைச் சிறப்பிக்கச் செய்த காலமுண்டு. ஆனால் இன்று ஏன் அத்தகைய தீரர்களும், ஞானிகளும் இல்லாது நாடு ஒளியிழந்து கிடக்கின்றது? அன்று அக்னிஜ்வாலை போன்றுஜொலித்துக்கொண்டிருந்த பிரம்மச்சரியவிரதம் இன்று இருக்கும் இடம் தெரியாது போய்விட்டதுதான் காரணம்.

பண்டைக் காலத்தில் நம் முன்னோர்கள் மக்கள் வாழ்க்கையை நான்கு பிரிவுகளாகப் பிரித்தார்கள். அவை பிரம்மச்சரியம், கிருஹஸ்தம், வானப்ரஸ்தம், சந்நியாசம் எனப்படும். பிரம்மச்சரிய ஆஸ்ரமம் எல்லா ஆஸ்ரமங்களுக்கும் பொதுவாகும். குருகுல வாசத்தில் பயிலும் ஒருவன் பிரம்மச்சரிய ஆஸ்ரமத்தில் நிலைபெற்ற பிறகே அவன் கிருஹஸ்தனாகத் தகுதியுடையவன் ஆகிறான். பிரம்மச்சரியத்தில் நிலைபெற்றவன் அதி அற்புதமான ஆற்றல் படைத்தவன் எனக் கருதப்படுகிறான். அதன் சக்தி அளப்பரியது. சான்று ஒன்று எடுத்துக்கொள்வோம். நீர் ஆனது உறைபனிக்கட்டியாக

இருக்கிறபொழுது ஆற்றல் அற்ற ஜடமாக இருந்த இடத்தில் கிடக்கிறது. அதே நீர் காட்டுவெள்ளமாகக் கரைபுரண்டு ஓடுகிற பொழுது யானைகளையும் இழுத்துக்கொண்டு செல்லும் ஆற்றல் உள்ளதாகவிருக்கின்றது. அதை நீராவியாக்கினால் பெரிய பெரிய இயந்திரங்களையெல்லாம் இயக்க வல்லதாக ஆகிறது. வஸ்து ஒன்று ஸ்தூலத்திலிருந்து சூட்சமத்திற்குப் போகிறபொழுது அதற்கு வருகிற சக்தி அளப்பரியது. உடலுக்கு உரம் கொடுப்பது உதிரம். அந்த உதிரத்தின் சாரம் தான் வீரியமாகிய விந்து சக்தி. சில நூற்றுக்கணக்கான ரத்தத்துளிகள் சேர்ந்துஒருசொட்டு விந்தாக மாறுகிறது என்று கூறுகின்றனர். சூரிய ஒளி எல்லார்க்கும் சமமாகக் கிடைப்பது போன்று இறைவனருளால் ஆத்மசக்தியாகிய வீரிய சக்தியை அனைவரும் சமமாகப் பெறுகின்றனர். அவரவர் அடைகின்ற பெருமையும் சிறுமையும் அதைப்பயன்படுத்தும் விதத்தைப் பொறுத்தே உள்ளன. ஒருவன் பன்னிரண்டு ஆண்டுகள் வழுவாத பிரம்மச்சரிய விரதத்தில் இருந்தால் அவனுக்கு மேதா என்கிற நாடி உடலில் தோன்றுகிறது. அதனால் அவன் சூட்சமமான விஷயங்கள் எதையும் தெரிந்துகொள்வதோடு இறைவன் காட்சியையும் பெறவல்லவனாகிறான். விவேகானந்தர் பரிவ்ராஜகப் பரமஹம்சராக இந்தியா முழுவதும் கால்நடையாகச் சுற்றிவந்தபொழுது அரசவின் விருந்தாளியாக ஒருசமயம் இருந்தார். அப்போது அரண்மனை நூலகத்தில் உள்ள நூல்களையெல்லாம் புரட்டிக்கொண்டிருந்தார். அரண்மனை திவான் சுவாமிஜியை அழைத்தது அவர் காதில் படவில்லை. மனதைக் கலக்க எண்ணிய திவான் ஒரு துப்பாக்கியால் ஆகாயத்தை நோக்கிச் சுட்டார். அப்படியும் அவர் மனது புத்தகத்திலேயே ஆழ்ந்திருந்தது. சிறிதுநேரம்கழித்துத் தற்செயலாய்முகத்தைத் திருப்பிய சுவாமிஜி வெகுநேரமாய் நின்றுகொண்டிருந்த திவானைக் கண்டு வந்தவிபரத்தைக் கேட்டார். இவ்வளவு கூக்குரலுக்கும் மனம் கலையாத தன்மை அவருக்கு எப்படி வாய்த்தது என்று திவான் வினவியபோது 'வழுவாத பிரம்மச்சரியமே காரணம்' என்றார் சுவாமிகள்.

உலகிலே பிரம்மச்சாரி ஒருவன்தான் எவரிடமும் போய் யாசிப்பதில்லை. பிறர் உதவியை எதிர்பார்ப்பதும் இல்லை. ஆனால் அவன் மற்றவர்களுக்கெல்லாம் ஏதாவது ஒரு வழியில் உதவிய வண்ணமாக இருப்பான். ஆக பிரம்மச்சாரி ஒருவன் தனி மனிதனாக இருந்துகொண்டு சமுதாயமனைத்தையும் இணைத்து அதைப் பேணிக்காக்கும் உயிர் போன்றவன். இராமாயணத்திலே வரும்பாத்திரங்களில் எல்லாருக்கும் ஒவ்வொரு பிரச்னை இருந்தது. அவரவருக்கு உண்டான பிரச்னையை ஆஞ்சனேயன் அற்புதமாகத் தீர்த்து வைத்தான். ராமனுக்கு அவன் மனைவி சீதையை அவனோடு சேர்த்து வைத்தது ஒப்பற்ற சேவை. சுக்ரீவனுக்கு அவன் நாட்டை மீண்டும் பெறச் செய்தது, விபீஷணனுக்கு லங்காபுரியில் அரசனாவதற்குஉதவியது, சீதையைநாயகனோடு சேர்த்து வைத்தது, இராவணனுக்கு அறவுரை வழங்கியது (ஆனால் அவன் அதை ஏற்றுக்கொள்ளவில்லை.) இறுதியில்சாகும் தறுவாயிலிருந்த பரதனைக் காப்பாற்றியது ஆகிய உதவிகளை மற்றவர்களுக்குச் செய்தும் அவன்யாருடைய உதவியையும் நாடிப்போனது இல்லை. பிரம்மச்சாரியாயிருக்கும்பொழுது உள்ள சுதந்திரம் குடும்பஸ்தனாகிவிட்டால் இருக்காது. பரமஹம்சர் பகர்ந்திருப்பதாவது: ''ஜயபுரி என்ற ஊரில் விஷ்ணு கோயிலில் சில பிரம்மச்சாரிகள் அர்ச்சகர்களாக இருந்து பூஜை செய்து வந்தனர். ஒரு நாள் அந்நாட்டு அரசன் தன் அமைச்சனை நோக்கி அந்த அர்ச்சகர்களை அரண்மனைக்கு அழைத்து வரும்படி ஆணையிட்டான். அமைச்சன் அவ்வாணையை அவர்களிடம் கூறவே ''நாங்கள் ஏன் அரண்மனைக்கு வரவேண்டும்? அரசனுக்கு இஷ்டமிருந்தால் எங்களைப் பார்க்கச் சொல்லுங்கள். நாங்கள் அங்கு வரமாட்டோம்' என்றனர். அமைச்சனும் நடந்தவற்றை அரசனிடம் கூறவே அரசன் சிறிது யோசித்து அர்ச்சகர்களுக்கு மணம் முடித்து வைக்கும்படி அமைச்சனுக்கு யோசனை கூறினான். அவ்வாறு அவர்களுக்கு விவாகம் நடந்த பிறகு அவ்வர்ச்சகர்களை அரசன் அழைக்க வேண்டியதவசியமில்லாது போய்விட்டது. அவர்களாகவே அரசனைத் தேடி வர ஆரம்பித்துவிட்டனர். பகவானுக்குப் படைத்த

புஷ்பங்களையும், பிரசாதத்தையும் அரசனுக்குக் கொடுக்க அரசனைத்தேடி அவர்களாகவே வந்தனர். குடும்பத்துக்குப் பொருள் தேவைப்பட்டதால் அவர்கள் அடிக்கடி அரசனிடம்வந்து போக வேண்டியிருந்தது. சுதந்திரமாக இருந்த அர்ச்சகர்கள் குடும்பியாக மாறியதால் அவர்களுக்கு இத்தகைய அல்லல்கள் ஏற்பட்டன.

யாண்டும் வாழப் பிறந்தவன் மனிதன். வாழ்க்கை ஆற்றல், அன்பு, அறிவு சொரூபமாகத் திகழவேண்டும். ஏதோ வெந்ததைத் தின்று விதி வந்தபோது சாவோம் என்று வரட்டு வேதாந்தம் பேசி சோம்பலுற்றிருந்து மடியும் வாழ்வை நாம் அறவே ஒழிக்கவேண்டும். யாண்டும் திண்ணியனுகத் திகழவேண்டும். கூர்மையில் க்ஷவரக்கத்திக்கு நிகராகவும் விறகு பிளக்கும் கோடாரி போன்ற உறுதி படைத்ததாகவும் நம் அறிவு திகழவேண்டும். அத்தகைய அறிவைப் பெறுவதற்குக் காம வாசனையற்ற தூயபிரம்மச்சரியமேஇன்றியமையாததாகும். அத்தகைய பரிசுத்தமான பிரம்மச்சரிய வாழ்விலிருந்து பேராற்றல் ததும்புகிறது. அது சிறந்த வஜ்ராயுதத்திற்கு நிகராகிறது. தேவர்களும் அசுரர்களும் அடிக்கடி சண்டை போடுபவர்கள். வலிவில் அசுரர்கள் தேவரைக் காட்டிலும் மிக்கவர். அசுரர்கள் ஆதிக்கம் ஒரு தடவை அதிகமானபோது அதைக் கண்ட தேவர்கள் ததீசி என்ற ரிஷியிடம் விண்ணப்பித்தனர். அந்தத் தியாக சீலர் ஒரு நைஷ்டிக பிரம்மச்சாரி. சமாதியில் தன் மனதை ஒடுக்கிய பிறகு தன் முதுகெலும்பை வஜ்ராயுதம செய்யத் தந்தார்.

பொருள் ஒன்று எவ்வளவு பழமை ஆகிறதோ அந்த அளவுக்கு அதற்குப் பெருமை வருகிறது. பல்லாண்டுகளாகப் பூமிக்கடியில் அழுந்திக்கிடந்த மரங்களே வைரங்களாக மாறுவதைப் போலச் சிறிதும் விரயம் பண்ணுது காப்பாற்றும் விந்து ஓஜஸ் சக்தியாக மாறுகிறது.

**मरणं बिन्दुपातेन जीवनं बिन्दु धारणात् ।**

விந்து கலந்து வீழ்வதால் மரணமும், அவ்விந்து முறையே கட்டிக் காப்பதால் தெய்வீக நிலையும் உண்டாகின்றன என சிவ சம்ஹிதை கூறுகிறது. Chastity is life and sensuality is death என்று ஓர் அறவுரை உண்டு. தூய்மையே வாழ்வு. சிற்றின்ப நுகர்ச்சியே மரணம் என்பது அதன் பொருள். பிரம்மச்சரிய ஆஸ்ரமம் நாட்டில் அழிந்து போனதற்கு எல்லாருமே காரணம் ஆவர். கல்வித்துறையில் மனம் செலுத்தும் சிந்தனையாளர்கள் பிரம்மச்சரியத்தின் மகிமையை ஏன் மாணவர்களிடம் புகட்டக்கூடாது? காம உணர்வைத் தூண்டும் நூல்களையும், திரைப்படங்களையும் அரசாங்கம் ஏன் தடை விதித்து அவற்றிற்குப் பதிலாக நல்லறத்தைப் போதிப்பதும், ஆண்மையை வலியுறுத்துவதும் ஆகிய புலனடக்கம் பற்றிய கருத்துக்களை மக்கள் புரியும் வண்ணம் ஏன் கதைகளாக, திரைப்படங்களாக வெளியிடக்கூடாது? மக்களைக் காம வெறியர்களாக்கி அவர்கள் மூலம் காமப் புதல்வர்களையும், நோயாளிகளையும், நாட்டில் தோற்றுவிக்கின்றனர். ஆண்டுக்கு ஒரு தடவை காந்தி ஜெயந்தி என்று விழா கொண்டாடுகிறோம். அவரின் பெருமையை, வாழ்ந்துகாட்டியதை வாய்கிழியப் பேசுகிறார்களே அவர் அனுஷ்டித்த பிரம்மச்சரிய விரதத்தை இன்று கடைப்பிடிக்கும் அரசியல் வாதிகள் யாரேனும் உண்டா? தலையில் அணியும் குல்லாயிலோ, உடுக்கும் துணியிலோ காந்தியின் இலட்சியம் இல்லை. காந்தி காட்டிய வழியில் நடப்பதே இன்று அரசியல் வாதிகள் செய்ய வேண்டிய செயல். தாம் பிரம்மச்சரிய விரதத்தைக் கடைப்பிடிக்குமுன் தான்தோன்றித்தனமாக வாழ்ந்தபோது பிறந்த மக்களுக்கும், பிரம்மச்சரியம் அனுஷ்டித்துத் தன்னடக்கத்துடன் கூடிய வாழ்க்கை வாழ்ந்தபோது பிறந்த மகனுக்கும் உண்டான மன இயல்பை தமது சத்திய சோதனையில் தெளிவுபடக் காட்டுகிறார். மக்களுக்குக் குடும்பக் கட்டுப்பாட்டை வலியுறுத்துகிற அரசியல் வாதிகள் தாங்கள் முதலில் பிரம்மச்சரியம் அனுஷ்டித்து மக்களுக்கு வழி காட்டவேண்டும். பிரம்மச்சரியம் அனுஷ்டிக்காதவன் சமுதாயத்திற்கு ஒரு நலனும் செய்ய முடியாது. பிரம்மச்சரியம் கடைப்பிடித்து வாழும் சுயநலப் பற்றற்ற சான்றோர்களையே நாட்டை ஆளும் தலைவர்களாக, அமைச்சர்களாகத் தேர்ந்தெடுக்க வேண்டும். உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசும் ஏமாற்றுக்காரர்களிடம் ஆட்சியைக் கொடுத்து

அடிமைப்பட்டுக் கிடக்கலாகாது. இன்றே எழு பது வயதுக்குப் பிறகு மணம் புரிந்து வாழும் மனிதர்கள் இருக்கின்றனர். அவர்கள் லட்சிய புருஷர்கள் ஆகமாட்டார்கள். அவர்கள் வழி யைப் பின்பற்றக் கூடாது. அவர்கள் வழியை விட்டு விலகிச் சான்றோர் வழிநடக்கும் பகுத் தறிவு என்று வருகிறதோ அன்றுதான் பிரம் மச்சரிய விரதம் போன்ற புனிதப் பண்புகள் மக்கள் மனதில் குடிபுகும். ஒரு நாடு அடைந் துள்ள முன்னேற்றம் அது எந்த அளவுக்குப் புலனடக்கத்தில் மேன்மை பெற்றுள்ளது என் பதைப் பொறுத்தே உள்ளது. புலனடக்கமில் லாது வெறும் பொருளாதார முன்னேற்றமோ, விஞ்ஞான முன்னேற்றமோ முன்னேற்ற மாகாது.

பிரம்மச்சரிய விரதம் காட்டிலே கிழங்கு களைத் தின்று வாழும்யாரோ சிலர்கடைப்பிடிக் கும் பண்பன்று. தூய வாழ்க்கை வாழ விரும் பும் ஒவ்வொருவரும் கடைப்பிடிக்கவேண்டிய அத்தியாவசியப் பண்பு பிரம்மச்சரியமாகும். பிரம்மச்சரியம் இயற்கைக்கு மாறானது அன்று. பெற்றோர் அனைவரும் இந்தப் புனித விர தத்தை உணர்ந்து ஓரிரு மகப்பேறு பெற்றன தும் பிரம்மச்சரியம் கடைப்பிடித்து நல்வாழ்வு வாழ்ந்து வருவார்களானால் குழந்தைகளையும் சிறப்பாகப் பேணிக்காக்க முடியும்; அவர் கள் மக்களுக்குச் சிறந்த முன்மாதிரியாகத் திகழமுடியும். மாணக்கர்கள் பிரம்மச்சரியத் தின் மகிமையை உணர்ந்து அதனைக் கடைப் பிடித்தால் நுண்ணிய அறிவும், சிறந்த ஞாபக சக்தியும், எதையும் தாங்கும் இதயமும், எந்தத்துறையில் நுழைந்தாலும் அதைச் சிறப் பாக நிறைவேற்றும் ஆற்றலும் படைத்தவர் களாகத் திகழமுடியும். பிரம்மச்சரியம் ஆண் பாலர், பெண்பாலர் அனைவருக்கும் பொது வானது. ஆகவே பெற்றோர்கள் தங்கள் மக்களுக்கு, அவர்களின் நிலையறிந்து சொல்லக் கடமைப்பட்டிருக்கின்றனர். ஆசிரியர்களும், அவ்வப்போது பிரம்மச்சரியத்தின் மகிமையை விஞ்ஞானபூர்வமாக விளக்குவது இன்னும் அதிகப் பயன் விளைவிக்கும். எவ்வளவு புறத் துணையிருந்தாலும் நம் மனது நமக்கு முற்றிலும் ஒத்துழைக்கும்படி பழக்கப்படுத்திக்கொள்ள வேண்டும். வெளிச்சம் இருக்கிற வீட்டில் திரு டன் நுழையான். அங்ஙனம் நல்ல எண்ணமே சதா குடிகொள்ளும் மனதில் தீய எண்ணம் தலையெடுக்காது. நல்ல எண்ணத்திலே நிலை பெற்று இருக்க எளிய வழி இடையறாது நாம ஜபம் பண்ணுதல், பகவான் மகிமைகளை உரு கிப் பாடுதல், ஏகாந்தத்தில் சென்று கண்ணீர் விட்டுப் பிரார்த்தனை செய்தல், அனுபூதிமான் கள் எழுதிய நூல்களை ஓதுதல், நல்லவர்களின் இணக்கத்தில் மட்டும் இருந்து வருதல் அவசி யம். இத்தகைய பழக்கங்களை மேற்கொண்டு ஒழுகிவருபவன் பிரம்மச்சரிய வாழ்வில் நிலை பெற்றவனாவான். நல்லதையே எண்ணி நல்ல தையே பேசி, நல்லதையே செய்து வருபவன் யாண்டும் நல்வாழ்வு வாழ்ந்தவனாகிறான். இன்றுநம் நாட்டில் உள்ள மக்கள் எண்ணிக்கை மின்னல் வேகத்தில் அதிகமாகிக்கொண்டிருக் கிறது. இந்த நிலை நீடித்தால் ஒவ்வொரு வருக்கும் உண்ண உணவு கிடைக்காது ஒரு வரை ஒருவர் கொன்று சாப்பிடவேண்டிய நிலை வந்தாலும் ஆச்சரியப்படுவதற்கில்லை. நாட்டின் நலனில் கருத்து வைத்து வீட்டில் உள்ள சிலராவது நல்ல முறையில் வாழச் செயற்கையான குடும்பக் கட்டுப்பாட்டைக் காட்டிலும், உடலுக்கும் மனதுக்கும் நலனை விளைவிக்கும் தூய பிரம்மச்சரியத்தைக் கடைப் பிடிக்க வேண்டும். (தொடரும்)

---

## செய்திகள்

### நிகழ்பவை

ஸ்ரீ விவேகானந்த வித்யாவன குருகுலப் பள்ளி மாணவர்கள் தீபாவளி விடுமுறைக்காக அக்டோபர் மாதம் 25ஆம் தேதி புதன்கிழமை மாலை 3 மணிக்குமேல் அவரவர்கள் ஊருக்குப் புறப்படுவார்கள்.

நவம்பர் மாதம் 3ஆம் தேதி வெள்ளிக் கிழமை முற்பகல் சேலம் ஜில்லா வலைசையூர் அரசினர் உயர்நிலைப்பள்ளி மாணக்கர்களுக்கு ஸ்ரீமத் நித்தியானந்த சுவாமிகள் அறவுரை வழங்குவார்கள்.

நவம்பர் மாதம் 8ஆம் தேதி புதன்கிழமை அன்று தீபாவளி விடுமுறைக்குப்பின் ஸ்ரீ விவே கானந்த வித்யாவன உயர்நிலைப்பள்ளி திறக் கப்படும்.

# ஸ்ரீமத் சுவாமி சித்பவானந்தர் அவர்கள்
## இயற்றிய நூல்கள்

| | |
|---|---|
| திருவாசகம்-மூன்றும் பதிப்பு பிரசார விலை | ரூ. 14-00 |
| ஸ்ரீமத் பகவத்கீதை-பனிரெண்டாம் பதிப்பு பிரசார விலை | ... 12-00 |
| ஞானயோக விளக்கம் | ... 8-00 |
| ராஜயோக விளக்கம் | ... 8-00 |
| கர்மயோக விளக்கம் | ... 7-00 |
| பக்தியோக விளக்கம் | ... 6-00 |
| பரமஹம்சரின் பெருமை | ... 6-00 |
| விவேகானந்த விவரணம் | ... 4-00 |
| ஸ்ரீ விவேகானந்தர் ஜீவிதம் | ... 4-00 |
| விவேகானந்த உபநிஷதம் | ... 4-00 |
| கடவுளின் வடிவங்கள் | ... 4-00 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-I | ... 3-50 |
| சந்தேகம் தெளிதல் பாகம்-II | ... 3-50 |
| அனுஷ்டான வேதாந்தம் | ... 3-00 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் உபதேச மஞ்ஜரீ ஆறும் பதிப்பு-பிரசார விலை | ... 2-75 |
| தினசரி தியானம்-பதினொன்காம் பதிப்பு (பிளாஸ்டிக் உறையுடன்) பிரசாரவிலை | ... 2-75 |
| ஸ்ரீ ராமகிருஷ்ணர் சரிதம் | ... 2-00 |
| தேவரகசியம் (முதலிய கதைகள்) | ... 2-00 |
| ஸ்ரீ சாரதா தேவியாரது சரிதம் | ... 2-00 |
| கண்ணன் என்னும் கடவுள் | ... 2-00 |
| **தாயுமானவர் இயற்றிய** | |
| பரிபூரணனந்தம் விரிவுரை | ... 3-00 |
| சின்மயானந்த குரு ஷை | ... 3-00 |
| ஆனந்தமானபரம் ஷை | ... 3-00 |
| சுகவாரி ஷை | ... 3-00 |
| மௌனகுரு வணக்கம் ஷை | ... 3-00 |
| எங்கும் நிறைகின்றபொருள் ஷை | ... 2-50 |
| கருணாகரக்கடவுள் ஷை | ... 2-00 |
| பரசிவ வணக்கம் ஷை | ... 1-00 |
| விரதவீரர் பீஷ்மர் (நாடகம்) | ... 1-50 |
| பஜனைப் பாடல்கள் | ... 1-50 |
| சந்நியாசி | ... 1-25 |
| குழந்தைகளின் களிக்கூடம் | ... 1-00 |
| இராவண தத்துவம் | ... 1-00 |
| சகோதரி நிவேதிதை | ... 1-00 |
| ஹரிச்சந்திரன் (நாடகம்) | ... 1-00 |
| காயத்ரீ | ... 1-00 |
| வாலிமோக்ஷம் (நாடகம்) | ... 1-00 |
| தவப்புதல்வர்கள் (நாடகம்) | ... 1-00 |
| ஏகலைவ்யனின் குருபக்தி (நாடகம்) | ... 1-00 |
| நோய்க்கு இடம் கொடேல் | ... 0-80 |
| நன்மக்களைப் பெறுதல் | ... 0-80 |
| பாண்டவ கௌரவ பெருமை (நாடகம்) | ரூ. 0-80 |
| ஆத்ம சக்தி | ... 0-75 |
| பாதுகா பட்டாபிஷேகம் (நாடகம்) | ... 0-75 |
| இறை வணக்கம் | ... 0-75 |
| செத்தவர்கள் நம்மோடு பேசுகிறார்களா? | ... 0-75 |
| *மனிதனது நிஜசொரூபம் | ... 0-70 |
| *சக்தி தத்துவம் | ... 0-70 |
| *சிவ தத்துவம் | ... 0-70 |
| பிரஹ்லாதன் (நாடகம்) | ... 0-65 |
| பார்வதி, லக்ஷ்மி, சரஸ்வதி கர்வபங்கம் | ... 0-65 |
| *ஈசன் எங்கும் நிறைந்துள்ளான் | ... 0-60 |
| இந்து மதமும் கிறிஸ்துவ மதமும் | ... 0-60 |
| *ஆலய வழிபாடு | ... 0-60 |
| *சூரிய நாராயணன் | ... 0-50 |
| *முருகக் கடவுள் | ... 0-50 |
| *விஷ்ணு தத்துவம் | ... 0-50 |
| தெய்விக மகிமைகள் | ... 0-50 |
| சைவன் யார்? | ... 0-50 |
| கர்மகாண்டம் எது? ஞானகாண்டம் எது? | ... 0-50 |
| மார்க்கண்டேயன் (நாடகம்) | ... 0-40 |
| தபோபலன் (நாடகம்) | ... 0-40 |
| *கணபதி | ... 0-40 |
| நன்னெறிகளும் அருள்வாக்குகளும் | ... 0-40 |
| வர்ணாச்ரம தர்மம் | ... 0-30 |
| அருள் விருந்து 1 to 25 ஒவ்வொன்றும் | ... 0-30 |
| The Bhagavad Gita (9th Imp.) | ... 15-00 |
| The Indian National Education | ... 8-00 |
| Sri Lalithambika Sahasranama Stotram | ... 8-00 |
| Ramakrishna Lives Vedanta | ... 8-00 |
| Facets of Brahman or The Hindu Gods | ... 5-00 |
| Daily Divine Digest (DELUXE) | ... 4-50 |
| Daily Divine Digest Ordinary | ... 2-50 |
| Mahabharata (with plastic cover) | ... 4-50 |
| Ramayana (do) | ... 4-00 |
| The Man Making Message of Vivekananda (with plastic cover) | ... 3-00 |
| The Bhagavad Gita (Small Size) (With plastic cover) | ... 3-00 |
| Sri Vishnu Sahasranama Stotram | ... 2-50 |
| Holy Bible—In the Light of Vedanta | ... 1-50 |
| *Introducing the Gita | ... 1-50 |
| *Key to Higher Life | ... 0-75 |
| *The Teacher | ... 0-60 |
| *The Student | ... 0-45 |

**தேவையான புத்தகங்களுக்கு உரிய விலையுடன் தபால் கட்டணத்திற்காக ஸ்ரீமத் பகவத்கீதைக்கு ரூ. 3-25ம் மஞ்ஜரீக்கு ரூ. 2-65ம் தினசரி தியானத்திற்கு ரூ. 2-40ம் மற்ற வெளியீடுகளுக்கு ரூ. 2-50 முதல் 3-50 வரை சேர்த்து அனுப்புங்கள்.**

*இக்குறியிட்ட புத்தகங்கள் ஏனைய பெரிய புத்தகங்களில் அடங்கியுள்ளன.

# மாதேஸ்வரன் மலையில் அந்தர்யோகம் - 2

## நவம்பர் மாதம் 4, 5 சனி, ஞாயிறு

1978ஆம் வருஷம் நவம்பர் மாதம் 4, 5 சனி, ஞாயிறு ஆகிய இரண்டு தினங்களில் கீழ்க்கண்ட வாழ்க்கை முறைப்படி கர்நாடக மாநிலம் மாதேஸ்வரன் மலையில்

*திருப்பராய்த்துறை ஸ்ரீ ராமகிருஷ்ண தபோவனம்*

**ஸ்ரீமத் சுவாமி நித்தியானந்தர் அவர்களால்**

*அந்தர்யோகம் நடாத்தப் பெறும்.*

சேலம் ஜில்லா மேட்டூர் தாலூகாவிற்கு அருகில் கொளத்தூர் என்னும் இடத்திலிருந்து, மாதேஸ்வரன் மலை செல்ல அந்தர்யோகத்தில் கலந்துகொள்ளும் அன்பர்களுக்கு வேனோ,லாரியோ ஏற்பாடு செய்யப்படும். அந்தர்யோகத்தில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் நவம்பர் மாதம் 3ஆம் தேதி மாலை மூன்று மணிக்குள் கொளத்தூர் சுப்பிரமணிய சுவாமி கோவிலுக்கருகிலுள்ள சன்மார்க்க சங்கக் கட்டடத்திற்கு வந்துசேரவேண்டும். தாய்மார்களும் இதில் கலந்துகொள்ளலாம். ஆனால் கைக் குழந்தையுடன் வரும் தாய்மார்களும், பன்னிரண்டு வயதுக்குக் கீழ்ப்பட்ட சிறுவர், சிறுமிகளும் இதில் கலந்துகொள்ள அனுமதிக்கப்படமாட்டார்கள். கொளத்தூர் வருவதற்கு சேலம் ஜில்லா மேட்டூரிலிருந்து பஸ்வசதியுண்டு. தங்கள் சௌகரியத்திற்குத் தேவையான படுக்கை முதலியவைகளைத் தாங்களே கொண்டுவர வேண்டும். இதில் கலந்துகொள்ள விரும்பும் அன்பர்கள் நபர் ஒன்றுக்கு ருபாய் முப்பது பிரம்மச்சாரி கிருஷ்ணன், ஸ்ரீ ராமகிருஷ்ண குருகுலம், சின்னதண்டா P. O. (Via) கொளத்தூர், மேட்டூர் தாலூகா, சேலம் ஜில்லா என்ற விலாசதாரரிடமோ, N. அன்னையன், சன்மார்க்க சங்கம், மேச்சேரி P. O., சேலம் ஜில்லா என்ற விலாசதாரரிடமோ M. O. மூலமோ, நேரிலோ தொகையைச் செலுத்திப் பதிவு செய்து அனுமதி கார்டு பெற்றுக்கொள்ளவேண்டும். கலந்துகொள்ளாத அன்பர்களுக்குத் தொகை வாபஸ் செய்ய இயலாது. பதிவு செய்யப்பெற்றவருக்குப் பதிலாக வேறொருவர் எடுத்துக்கொள்ளப்படமாட்டார். இரண்டு நாட்கள் உணவுச் செலவும், வாடகைச் செலவும் கொளத்தூரிலிருந்து மாதேஸ்வரன்மலை போய்த் திரும்பிக் கொளத்தூர் வர ஆகும் போக்குவரத்துச் செலவும் ரூ. 30-00ல் அடங்குகிறது. மாதேஸ்வரன் மலையில் அந்தர்யோகிகள் தங்குவதற்கு இடம் வசதிசெய்து தரப்படும்.

### வாழ்க்கை முறை

*காலை*

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| துயில் எழுந்திருத்தல் | 4-30 | |
| நாமஜபம் | 5-00 | 5-30 |
| ஆசனம், நீராடல் | 5-30 | 7-00 |
| தியானம் | 7-30 | 7-45 |
| சிற்றுண்டி | 7-45 | 8-45 |
| உபந்யாசம் | 8-45 | 9-45 |
| மௌனம் | 9-45 | 10-30 |
| பஜனை | 10-30 | 11-15 |
| ஆலய வழிபாடு, அர்ச்சனை, ஆரதி | 11-15 | 12-15 |

*மாலை*

| | மணிமுதல் | மணிவரை |
|---|---|---|
| உணவு, ஓய்வு | 1-00 | 3-15 |
| உபந்யாசம் | 3-15 | 4-15 |
| வாசிப்பு | 4-15 | 4-45 |
| பாணம், உலாவல், நீராடல் முதலியன | 4-45 | 6-15 |
| அர்ச்சனை | 6-15 | 7-15 |
| தியானம் | 7-15 | 7-45 |
| உணவு | 7-45 | 8-45 |
| ஸத் ஸம்பாஷணை | 8-45 | 9-30 |
| நித்திரை | 9-30 | |

Edited by SWAMI NITHYANANDA,
Printed & Published by Swami Sankarananda at Tapovanam Printing School, Tirupparaitturai, Tiruchi Dt.